எனது

# வெளிநாட்டு அனுபவம்







...தி அர்ச்சுனன்

R.T. ARASU

# எனது வெளிநாட்டு அனுபவம்

N. பார்வதி அர்ச்சுனன்

அர்ச்சுனன் பதிப்பகம்
சென்னை—24. கிளை : ஈரோடு.

முதற் பதிப்பு : ஜூன், 1961.
விலை ரூ. 1 00


## வெளிநாட்டு நாணய மதிப்பு

இந்திய 1 ரூபாய்க்கு, U. S. A. நாணயத்தில் 21 சென்ட் ஆகிறது.

1 டாலருக்கு ரூ. 4—76 ஆகிறது.

1 ரூபாய்க்கு, U. K. நாணயத்தில், 1 ஷில்லிங், 6 பென்ஸ் ஆகிறது.

1 பவுன், ரூ. 13—35 ஆகிறது.

1 ரூபாய்க்கு, மேற்கு ஜெர்மன் நாணயத்தில், 88 மார்க்ஸ் ஆகிறது.

1 ரூபாய்க்கு, ரஷ்ய நாணயத்தில், 84 ரூபிள் ஆகிறது.

1 ரூபாய்க்கு, ஜப்பான் நாணயத்தில், 75·6 என் ஆகிறது.

1. மில்லியன் என்பது 10 லட்சம்.

## பிழை திருத்தம்

| பிழை | | திருத்தம் |
|---|---|---|
| Pastan | — | Bastan |
| Newyoark | — | New York |
| Form Organization | — | Farm Organisation |
| Colambia | — | Columbia |
| Chicogo | — | Chicago |
| Colifornia | — | California |
| Econoemics | — | Economics |
| Sanfransisco | — | Sanfrancisco |
| Marry land | — | Merry land |
| Lasangels | — | Lasangeles |



மாருதி பிரஸ், 83, பீட்டர்ஸ் ரோடு, சென்னை-14.

# சிறப்புரை

தமிழ் மாநிலக் கல்வி அமைச்சர்
**கனம். சி. சுப்பிரமணியம் அவர்கள்**

பழைய கோட்டை என்று சொன்னுலே, கால்நடைப் பண்ணைதான் ஞாபகத்திற்கு வரும். புகழ் பெற்ற "காங்கயம் சாதி மாடுகள்" இங்குதான் வளர்க்கப்படுகின்றன.

இப்பண்ணையை நடத்தி வருகின்றவர்கள், பழைய கோட்டை பட்டக்காரர் குடும்பத்தினர்.

காலம் சென்ற திரு. நல்லதம்பிச் சர்க்கரை மன்ருடியார், கால்நடை வளர்ப்பதில் மிகவும் அனுபவ அறிவு பெற்றவர். அவர்கள் காலத்தில்தான் கால்நடைப் பண்ணை, பெரிதும் வளர்ச்சியும் புகழும் பெற்றது. அவர்களுடைய மருமகளும், காலம் சென்ற திரு. அர்ச்சுனன் அவர்களின் மனைவியுமாவார், திருமதி. பார்வதி அர்ச்சுனன்.

பட்டக்காரர் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண், அமெரிக்கா சென்ருர்கள் என்று சொன்னுல், பெரிதும் அதிசயிக்கக் கூடியதுதான். அந்த அதிசயமும் நடைபெற்று, அவர்கள் அமெரிக்கா, ஜப்பான் முதலிய நாடுகளுக்குச் சென்று, அந்நாடுகளில் ஏற்பட்டிருக்கும் விவசாய அபிவிருத்தியையும், கால்நடைப் பண்ணைகள் நடைபெறும் முறைகளையும் நேரில் தெரிந்து வந்துள்ளார்கள்.

அவர்கள் தங்களுடைய அனுபவத்தை, தமிழ்நாட்டு மக்களுக்கு இந் நூலின் மூலம் அளிக்க முன் வந்துள்ளது மிகவும் பாராட்டிற்குரியதாகும். அவர்கள் கண்ட காட்சிகளையும், பெற்ற அனுபவங்களையும் எளிய நடையில் எடுத்துரைத்துள்ளார்கள்.

இந் நூல், நம்நாட்டு விவசாய மக்களுக்கு, வெளிநாட்டில் நிலவி வரும் முன்னேற்ற சக்திகளை ஓரளவு விளக்கிக் காட்டும் என நம்புகிறேன்.

சென்னை,
4—6—'61.

சி. சுப்பிரமணியம்.

# என் பயணம்

என்னுடைய அமெரிக்கப் பயணத்தில், எனக்குப் பல படிப்பினைகள் கிடைத்தன. நமது சர்க்கார் என்னை அமெரிக்காவிற்கு அனுப்பியபோது, எப்படி எனக்கு அளித்துள்ள பொறுப்பை நிறைவேற்றுவது என்று கவலைப்பட்டேன். சென்று திரும்பி வந்தபோது, என்னுடைய கடமைகளையும், பொறுப்புகளையும் ஓரளவு நிறைவேற்றியதாகவே உணர்ந்தேன்.

தூதுக் குழுக்கள், வெளி நாடுகளுக்குச் செல்வதன் மூலம், நாட்டிற்கு நாடு சங்கிலித் தொடர்போன்ற சக்தி மிக்க தொடர்பும், நிரந்தரச் சகோதர அன்பும் மலரும் என்பதை என் அனுபவத்தால் கண்டுகொண்டேன். அரசியல் வேற்றுமைகள்கூட இத்தகைய தூது முறைகள் மூலம் அறுந்து விடுகின்றன என்பது மறைக்கமுடியாத உண்மையாகும். நமது தாயகத்திலுள்ள அனுபவமிக்கவர்களையும், அறிவாளர்களையும், அடிக்கடி வெளி நாடுகளுக்கு அனுப்புவதன் மூலம், உலகமே மகிழும் உயர்ந்த தத்துவத்தை உலகத்திற்குப் பரப்பலாம்.

உலக நாடுகளைச் சுற்றி, அங்கெல்லாம் காணும் உண்மைகளை அறிந்து கொள்ளும்போது நமக்கு, "முழு ஞானம்" கிடைக்கும். எனது நான்கு மாத காலப் பயணத்தையும். ஒன்றுவிடாமல் எழுதுவதானால், புத்தகம் மிகப் பெரிதாகி விடும். ஆதலால், முக்கியமான சிலவற்றை மட்டும் இந் நூலில் எழுதி யிருக்கிறேன். இந் நூல், தமிழ் மக்களுக்கும், குறிப்பாக விவசாய மக்களுக்கும் ஓரளவு துணைபுரியுமானால், எனக்கு அதுவே மகிழ்ச்சி!

எனது நூலுக்கு, சிறப்புரை தந்து உதவிய நம் தமிழகக் கல்வி அமைச்சர் அவர்களுக்கும், என்னை வெளி நாட்டிற்கு அனுப்பிவைத்த நமது பாரத சர்க்காருக்கும், இந்தச் சமயத்தில் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்வது எனது கடமையாகும். இதனைச் சிறப்பாக வெளியிட்டுள்ள பதிப்பகத்தாருக்கும் என் நன்றி.

பழைய கோட்டை
6—6—1961

இங்ஙனம்,
N. பார்வதி அர்ச்சுனன்.

# பதிப்புரை

நீண்டகால இடைவெளிக்குப் பிறகு, அர்ச்சுனன் பதிப்பகம், தனது நான்காவது வெளியீட்டைத் தமிழ் மக்களுக்கு அளிப்பதில் மகிழ்ச்சியடைகிறது. நிரந்தரமான புகழும், சரித்திரப் பெருமையுமுடையது பழைய கோட்டை. கால் நடைகள், அங்கே கண்களெனக் காத்து வளர்க்கப்படுகின்றன. "காங்கயம் கால்நடைப் பண்ணை" உரிமையாளரும், பெரு நிலக்கிழாருமான திருமதி N. பார்வதி அர்ச்சுனன் அவர்கள், தம்முடைய கால்நடைப் பண்ணையில், ஆயிரம் கால்நடைகளை வைத்துப் பராமரித்து வருகிறார்கள். தமது பரந்த நிலப் பரப்பின் பெரும் பகுதியை, கால்நடை வளர்ச்சிக்கென்றே ஒதுக்கி, அவற்றின் தர உயர்விற்கும், புகழ் பெருக்கத்திற்கும் பாடுபட்டு வருபவர்களாகும். அத்தகையவர்கள், எங்கள் வேண்டுகோளுக்கிணங்கி, தங்கள் அமெரிக்கா, ஜப்பான் அனுபவங்களை ஒப்பவற்ற நிலையிலும், சிரமத்தைப் பாராது எழுதித் தந்தார்கள். அந்த உதவியை எங்கள் பதிப்பகம் மறவாது. அவர்களுக்கு எங்கள் நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

தென்னிந்தியப் பெண் பிரதிநிதியாக திருமதி N. பார்வதி அர்ச்சுனன் அவர்களை, இந்திய சர்க்கார் வெளிநாட்டிற்கு அனுப்பியதானது, தமிழகத்திற்குப் பெருமை தருவதாகும். இந் நூலுக்கு, அன்பு கூர்ந்து சிறப்புரை வழங்கிய தமிழ் மாநிலக் கல்வி அமைச்சரும், அரசியல் அறிஞருமான கனம். C. சுப்பிரமணியம், அவர்களுக்கு எங்கள் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

புத்தகம் சிறந்த முறையில் உருவாக ஒத்துழைத்த ஈரோடு டாக்டர் L. K. அவர்களுக்கும் "மெயில்" அலுவலக நண்பர் S. சந்திரன், அவர்களுக்கும் எங்கள் நன்றி. தமிழக மக்கள், என்றும் போல் எங்களுக்கு உதவுவார்கள் என்று நம்புகிறோம்.

நிர்வாகி

அர்ச்சுனன் பதிப்பகம்,
சென்னை—24.



சென்னை மாகாண கால்நடைக் கண் காட்சியில் முதற்
பரிசு பெற்ற காங்கயம் பூச்சிக் காளை.



அகில இந்திய தெனபிராந்திய கால்நடை கண் காட்சியில் திருமதி. பார்வதி அர்ச்சுனன் அவர்கள், அ. இ. கா. க. தலைவர் சஞ்சீவி ரெட்டி அவர்களிடம் பரிசு பெறுகிறார்கள்.

கண் காட்சிகளில் பெற்ற பரிசுகளிற் சிலவற்றுடன் காட்சி அளிக்கிறார்கள்



அமெரிக்க விமான நிலையமொன்றில் "பறவைகளின் சொர்க்கம்" என்ற இடத்தைத் தூதுக்குழுவினர் பார்வையிடுகின்றனர். வலதுபுறம், திருமதி. பார்வதி அர்ச்சுனன்.

# எனது வெளிநாட்டு அனுபவம்

நான் நமது மதிப்பிற்குரிய இந்திய சர்க்காரால் அனுப்பப் பட்ட விவசாய முக்கியஸ்தர்களின் தூதுக் குழுவில், தென்னுட்டின் சார்பில் ஒரு பெண் பிரதிநிதி யாக அமெரிக்காவிற்குச் சென்றுவந்தேன்.

இந்த எனது வெளிநாட்டுப் பயணத்தைத் தொடங்கு வதற்கு முன்னுல், எப்பொழுதுமே அமெரிக்காவிற்கோ, அல்லது வேறு எந்த வெளிநாட்டிற்குமோ சென்று வந்தது கிடையாது. சென்று வரலாம் என்ற எண்ணம் கூட எனக்கு ஏற்பட்டது கிடையாது. திடீரென்று ஒரு நாள், நமது பாரத சர்க்காரிடமிருந்து எனக்கு ஒரு அழைப்பு வந்தது.

அந்த அழைப்பில், சர்க்கார் என்னைத் தாங்கள் அமெரிக்காவிற்கு அனுப்பவிருக்கும் விவசாயத் தூதுக் குழுவில் தென்னிந்தியப் பெண் பிரதிநிதியாக அனுப்ப விரும்புவதாகவும், அதற்கு என்னுடைய சம்மதத்தைத் தெரிவிக்கும்படியும் கேட்டிருந்தது. எதிர்பாராத நிலையில் நமது அரசின் அழைப்பு வந்தது எனக்கு ஆச்சர்யமாகவே இருந்தது.

அதேசமயம் ஒரு நல்ல வாய்ப்புக் கிடைத்ததே என்ற மகிழ்ச்சியும் ஏற்பட்டது.

சரி எப்படியாவது போய் வந்துவிடலாம் என்று எனக்குள்ளாகவே முடிவு செய்துகொண்டேன். அந்த முடிவிற்கு நான் வந்ததற்கு முக்கியமான காரணம்...

எங்கள் கால்நடை வளர்ப்பிற்கும், சிறந்த எதிர்கால வளர்ச்சிக்கும் இந்தப் பயணம் உதவும் என்ற நம்பிக்கை தான். நான் இப்படிப்பட்ட நேரங்களிலெல்லாம், சொல்ல வேண்டியவர்களிடம் கூடச் சொல்லாமல் அமெரிக்கத் தூதுக் குழுவில் கலந்து கொள்வதாகச் சம்மதம் தெரிவித்து, சர்க்காருக்கும் விரைவில் பதில் அனுப்பிவிட்டேன்.

பிறகு சில நாட்களில் சர்க்கார் மட்டத்தில் நடக்க வேண்டிய வேலைகளெல்லாம் முடிந்து எனக்குப் பாஸ்ப் போர்ட்டும் கிடைத்தது.

நான் அமெரிக்கப் பயணத்தைத் தொடங்குவதற்குப் புறப்பட்டபோது, எங்கள் குடும்பத்தாரும், சுற்றத் தாரும், எங்கள் குடும்ப நண்பர்களும், என்னை உபசரித்து, வாழ்த்துக்களைத் தெரிவித்து, சென்னையில் வழியனுப்பி வைத்தார்கள். சென்னையிலிருந்து விமானத்தில் புறப் பட்ட நான், டெல்லியிலிருந்த தூதுக் குழுவினரோடு கலந்து கொண்டேன்.

எங்கள் விவசாயத் தூதுக் குழுவில் இருந்தவர்கள் மொத்தம் 20 பேர். இந்த இருபது பேரில் தமிழகத்தைச் சேர்ந்த நானும்,

•லக்னோவைச் சேர்ந்த சகோதரி டோரஸ் டிக்கோனா (Dòras Diccona) என்பவரும் தான் பெண் பிரதிநிதிகள்.

தூதுக்குழுவில், இந்திய மாநிலங்கள் அனைத்தி லிருந்தும் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

நாங்கள் 20 பேரும் 1960–ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 14–ஆம் தேதியன்று அதிகாலை 4 மணிக்கு, "பேன் அமெரிக்கன்" (Pan American) என்ற விமா னத்தில் புறப்பட்டோம்.

விமானத்தில் பறந்து கொண்டிருக்கும்பொழுது உலகத்தில் இன்று நாகரீகம் வளரும் இடமாகவும், செல்வ வளங்கள் கொழிக்கும் தளமாகவும், விஞ்ஞானப் புதுமைகளை உருவாக்கும் அரங்கமாகவும் விளங்கும் இடத் திற்குப் போகிறோம் என்ற மகிழ்ச்சி, மனமெல்லாம் நிறைந்திருந்தது.

வலிவும், பொலிவுமிக்க அந்த நாட்டிற்குச் சென்று, புதியபல செய்திகளையும், அனுபவங்களையும் பெற்று வரப் போகிறோம் என்ற தெம்பும் எனக்கு நிறைந் திருந்தது.

நிறைய விஷயங்களைக் கற்றுக்கொண்டு திரும்ப வேண்டும் என்ற ஆர்வம் வளர்ந்துகொண்டே இருந்தது.

குழுவிலிருந்த மற்ற பிரதிநிதிகளுக்கும் இந்த எண்ணங்களே நிறைந்திருந்தன என்பதை, அவர்கள் முகங்களிலிருந்தே புரிந்துகொண்டேன்.

இத்தகைய பல புதிய உணர்வுகளைக்கொண்டு செல்லும் எங்களைச் சுமந்துகொண்டு, அந்த அழகான "பேன் அமெரிக்கன்" விமானம் வான வீதியில் மிதந்து கொண்டிருந்தது.

எங்கள் விமானம் ஈரான் (Iran) இஸ்ட்டான்புல் (Istanbul) ஜெர்மன் (German) வழியாகச் சென்று

அழகும், சுறுசுறுப்பும், பீடுநடைபோடும். இலண்டன் மாநகரத்தையடைந்தது. அங்கே எங்களுக்கு ''ஸ்கைவே'' (SkyWay) என்ற ஹோட்டலில் தங்குவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

அந்த ஹோட்டலில் போய் எங்கள் சாமான்களை வைத்துவிட்டு, சிறிதுநேரம் பறந்துவந்த களைப்புத் தீர இளைப்பாறினோம்.

பிறகு நகரத்தைச் சுற்றிப்பார்த்து வரலாம் என்று புறப்பட்டுப் போனோம்.

சில இடங்களுக்கு நடந்தும், இரயிலிலும் (Tube train) பஸ்ஸிலுமாக இரவு 10 மணிவரையிலும் சுற்றி னோம். 10 மணிக்குமேல் தங்கியிருந்த ஹோட்டலுக்கு வந்து சேர்ந்தோம். ஆர்வத்தில் அலைந்தபோது ஒன்றும் தெரியவில்லை. திரும்பி வந்ததும் மிகவும் எனக்குக் களைப்பாக இருந்தது. ஆதலால் நன்றாக உறங்கினேன். மறுநாள் வழக்கம்போல் அதிகாலையில் எழுந்துவிட்டேன்.

8-30 மணிக்கெல்லாம் இரண்டாவது முறையாக நகர உலாவிற்குக் கிளம்பினோம். அவசர அவசரமாகச் சில முக்கியமான இடங்களை மட்டும் பார்த்துவிட்டு 11 மணிக்கெல்லாம் ஹோட்டலுக்குத் திரும்பிவிட்டோம்.

அங்கு நகரத்தில் எங்கு பார்த்தாலும், யாரைப் பார்த்தாலும், அந்த நாட்டு மக்கள் வெகு சுறுசுறுப்பாகக் காணப்படுகிறார்கள். அவர்கள் முகங்களில் சோர்வு என்பதையே காண முடியவில்லை.

கடை வீதிகளில், கடைக்காரர்கள் ஓய்வின்றியும் உற்சாகம் குறையாமலும் வியாபாரங்களைக் கவனிக்கிறார்கள். பொருட்களை வாங்க வருவோரிடம் அவர்கள்

காண்பிக்கும் மரியாதையையும், அன்பையும் கண்டவர்களுக்கு ஏதாவது வாங்காமல் திரும்புவதற்கு மனம் வராது. அவ்வளவு மரியாதையும், மதிப்பும் வைத்து நடந்து கொள்கிறார்கள். இந்த முறை என்னை மிகவும் கவர்ந்தது. இவற்றையெல்லாம் பார்த்துவிட்டு ஹோட்டலுக்குத் திரும்பிய நாங்கள், எங்கள் சாமான்களை மூட்டை கட்டிக்கொண்டு விமான நிலையத்திற்குப் பயணமானோம்.

சரியாகப் பன்னிரண்டு மணிக்கெல்லாம் விமான நிலையத்திற்குப் போய்விட்டோம். அங்கிருந்து ஒரு மணிக்கு, வெளிநாட்டு விருந்தினர்களாகிய இந்திய மக்கள் இருபது பேரையும் ஏற்றிக்கொண்டு விமானம் வானவெளி யாத்திரையைத் தொடங்கியது.

எங்கள் விமானம் சிறிது நேரத்திற்கெல்லாம் 3 மணியளவில், பாஸ்ட்டன், (Pastan) போய்ச் சேர்ந்து விட்டது.

பாஸ்ட்டன் விமான நிலையத்தில் எங்களைஇறக்காமல், விமானத்திற்குள்ளேயே விமான நிலைய அதிகாரிகள் அடைத்து வைத்திருந்தார்கள். காரணம், நாங்கள் இறங்கினால் கஸ்டம்ஸ் அதிகாரிகள் சோதனை செய்ய வேண்டுமல்லவா ? அதற்காகத்தான். இதனால் நாங்கள் 4 மணி வரையில் விமான நிலையத்தில் விமானத்திற்குள்ளேயே இருந்து தீரவேண்டிய நிலை ஏற்பட்டது.

பிறகு 4 மணிக்கு பாஸ்ட்டன் விமான நிலையத்தை விட்டு எங்கள் விமானம் புறப்பட்டு, ஒரு மணி நேரத்தில் நியூயார்க் (New yoark) அடைந்து பிறகு இரவு 8 மணியளவில் வாஷிங்டன் (Washington) வந்து சேர்ந்தோம்.

இதற்குள், வயிற்றுப்பசி பொறுக்க முடியாமல் நான் பட்டபாடு பெரும்பாடாகிவிட்டது.

இங்கு விமான நிலையத்தில் விமானம் கால்களை ஊன்றியதும், நாங்களும் விமானப் படிகளில் இறங்கினோம். எங்களை வரவேற்பதற்காக விமான நிலையத்தில் டெக்னிக்கல் லீடர், (Technical Leader) திரு. கிளப் (Mr. Glaf) என்பவரும், குடும்பப் பொருளாதார உறுப்பினர் (Home Economic Agent) மிஸ். ட்ரிங்கர் (Miss. Drinker) என்பவரும் எங்களுக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள்.

அந்த நல்லவர்கள் எங்கள் தூதுக் குழுவினரை இன் முகத்தோடு வரவேற்று உபசரித்து இரவு 11 மணிக்கு ஹோட்டலுக்கு அழைத்துப் போனார்கள்.

எனக்கோ பசி மயக்கம், தலைவலி. ஒன்றுமே சாப்பிடாமல் படுக்க வேண்டியதாகி விட்டது. காரணம் நேரமாகிவிட்டதால் எனக்கு உண்பதற்கு எதுவும் கிடைக்கவில்லை. எதிர்பாராமல் ஏற்பட்ட உண்ணாவிரதத்தோடு, எங்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த அறையில் சகோதரி மிஸ், டிக்கோனாவுடன் உறங்கினேன்.

மறுநாள் காலையில் எங்களைச் சந்திக்க வந்த டெக்னிக்கல் லீடர் திரு கிளப் (Mr. Glaf) தூதுக் குழுவினர் செல்ல வேண்டிய இடங்கள், காணவேண்டிய பகுதிகள், அதற்கான வழி முறைகள் ஆகியவைகளைப் பற்றி எங்களுக்கு விளக்கிக் கூறினார்.

எங்களை, நமது பாரத சர்க்கார் அமெரிக்காவிற்கு அனுப்பியது கீழ்க்கண்ட விஷயங்களை அறிந்து வருவதற்காகத்தான்.

1. பண்ணைக் கடன் (Farmcredit)

2. கூட்டுறவுச் சந்தை (Cooperative Marketing.)

3. பண்ணை அமைப்பு முறை, 4-H கிளப். (Form-organization and 4-H Club.)

4. சேவையின் விரிவு-ஆராய்ச்சி-குடும்பப் பொருளாதாரம். (Extention Service, Research. and Home Ecoenomics.)

5. கால் நடை (Animal Husbandry.)

தூதுக் குழுவினரில், நானும் ஆந்திரப் பிரதேசத்தைச் சேர்ந்த திரு. கிருஷ்ணப்பா, என்பவரும் பொதுவாக விவசாயம் சம்பந்தப்பட்ட விஷயங்களையும், குறிப்பாகக் கால் நடைப் பராமரிப்பு பற்றியும், அறிந்து வருவதற்காகவே சென்றோம்.

என்னைப் பொறுத்த வரையில், முடிந்தவரை எனக்குத் தரப்பட்ட பொறுப்பை கவனமாக நிறைவேற்றியிருப்பதாகவே உணருகிறேன். கால்நடைகளைப்பற்றி, பின்னால் சிறிது விளக்கமாகக் கூறியிருக்கிறேன்.

மற்ற தூதுக்குழு உறுப்பினர்களும், விஷயங்களைத் தெளிவாக உணர்ந்திருக்கிறார்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

ஐக்கிய அமெரிக்காவில் நான் சுற்றிப் பார்த்த இடங்களில் உணர்ந்து கொண்ட பல விஷயங்களில் ஒன்று. அமெரிக்க மக்கள், எதை ஆரம்பித்தாலும், அதைப்பற்றி ஆழ்ந்து சிந்தித்து, ஆராய்ந்து, அதனால் நாட்டிற்கும்-மக்களுக்கும் நன்மைகள் உண்டு என்று தெரிந்தால்தான் ஆரம்பிப்பார்கள். ஆரம்பித்து விட்டால்...ஆரம்பித்த வேலைகளை, வெற்றிகரமாக முடிப்பதில் கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள்.

அங்கே, கால் நடைகளை வளர்ப்பதற்காக, அந்த நாட்டு மக்களும், ஐக்கிய அமெரிக்க சர்க்காரும், எடுத்துக்

கொள்ளும் முயற்சியும், நடத்துகின்ற முறைகளும், பொதுவாகப் பாராட்டப்பட வேண்டியவைகளாகும்.

அமெரிக்காவில்,கால் நடை வளர்ப்போடு மிஷினரியும் சம்பந்தப்படுத்தப் பட்டிருக்கிறது, அதனுல் கால் நடை வளர்ச்சி துரிதப் படுவதற்கான வாய்ப்புகள் இருக் கின்றன.

தென் காலி போர்னியா (Southern Colifornia) வில் சராசரி, 200 - க்கும் மேற்பட்ட கால்நடைகள் வைத்திருக்கின்றனராம். இவற்றில், கௌஸ்பிரவுன், (Cowsbrown) கெரான்சி (Guernsey) ஹோல்ஸ்ட்டி யன்ஸ்(Holsteins) ரெட்டாணிஷ் (Rəddanish) இந்தஜாதி மாடுகளில் சில, வெண்ணே அதிகமாகத் தருபவை, ஹோல்ஸ்ட்டியன்ஸ் என்னும் இனத்தைச் சேர்ந்த மாடுகள் பால் அதிகமாகத் தருகின்றன.

மேற் குறிப்பிட்ட இனங்களேச் சேர்ந்த கால் நடை களெல்லாம், ஐரோப்பிய தேசங்களிலிருந்து கொண்டு வரப்பட்ட இனங்களாகும்.

ஐக்கிய அமெரிக்கா முழுவதிலும், காளேகளுக்கு அதிகக் கிராக்கி இருக்கிறது. தனிப்பட்டவர்களால் வளர்க்கப்படும் இத்தகைய கால் நடைகளுக்கு, விலே அதிகமாக இருந்து வருகிறது. ஆனுல், இவற்றையெல் லாம், கூட்டுறவு சொசைட்டிகள் மூலமாகவே வினியோ கிக்கும் நல்ல ஏற்பாடும் நடைமுறையில் அமுலில் இருந்து கொண்டிருப்பது,ஒரளவு விலே குறைவாகக் கிடைப்பதற்கு வாய்ப்பைத் தருகிறது.

நாங்கள் பார்த்த சில, கூட்டுறவு சொசைட்டிகளில், இன்ஷுலேஷன் குவாலிட்டி (Insulation) என்னும்

செயற்கைக் கருத்தரிப்புத்தரம் இருந்து கொண்டிருக் கிறது.

இங்கிருக்கும் மாடுகளில் மூன்றில் ஒரு பகுதி மாடுகள் செயற்கைக் கருத்தரிப்பு மூலமாகவே கன்றுகளை ஈன்றுள்ளன என்பது கவனிக்கத்தக்கது.

அமெரிக்காவில் கால் நடைகளைக் கண்காணிக்கும் முறையும், அதற்காக எடுத்துக் கொள்ளும் முயற்சியும் போற்றப்படும் விதத்தில் செய்யப்படுகிறது.

அதே சமயம், நாம் நமது கால் நடைகளை வளர்ப் பதற்காக எடுக்கும் முயற்சிகளையும், முறைகளையும் விட அங்கே உயர்வாக இருக்கிறது என்று சொல்லிவிட முடி யாது. நமக்கும் அவர்களுக்கும் முறைகளில் மாற்றமேதவிர தன்மையில் ஒன்றுதான். அங்குள்ள விவசாய மக்கள், பால் அதிகரிப்பதற்காகவும், மாட்டுத் தீனியின் தரத்தை உயர்த்துவதற்காகவும் அதிக அக்கறையோடு பாடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

பண்ணைகளில் புல் அறுப்பது, பால் கறப்பது போன்ற வேலைகளையெல்லாம் அவர்கள் கைகளால் செய்வதைக் குறைத்துக்கொண்டு, மிஷின்களை அந்த வேலைகளுக்கு அதிகமாகப் பயன்படுத்துகிறார்கள். இதனால், விவசாய மக்களின் ''வேலைப் பளு'' குறைகிறது. வேலை நேரம் அதிகமாகிறது.

மாட்டுத் தீனியைப் பொறுத்தவரையில், அங்கே அதிகமாக உற்பத்தி செய்வதற்கான வசதி இருக்கிறது. நம் நாட்டைக்காட்டிலும் உற்பத்தி அதிகம் இருந்தாலும் நம் நாட்டைவிட அங்கே விலைமட்டும் அதிகமாக இருக் கிறது. இந்த விலை உயர்வை ஓரளவு சர்க்கார் கட்டுப் படுத்திக் குறைந்த விலைக்குக் கிடைக்கச் செய்திருக்கிறது

அதுமட்டுமல்ல...விவசாயிகள் ''தீனிப் பஞ்சம்'' என்று சொல்லிவிடாத அளவுக்கு, எப்போதும் சௌகரியமாக விவசாயிகள் வாங்கும் விதத்தில், விவசாயிகளின் மார்க்கெட்டிங் சொஸைட்டிகளின் மூலம் விற்பனை செய்யப் படுகிறது.

அங்கு சர்க்கார் கட்டுப்பாடு மட்டும் இல்லாதிருக்குமானால், விவசாயிகள் ''மாட்டுத் தீனி'' விஷயத்தில், மிகவும் துன்பப்பட நேர்ந்திருக்கும்.

அங்கிருக்கும் ஒவ்வொரு டைரியிலும், மேஸ்(Maize); மில்லட்ஸ் (Millets): சோயாபீன்ஸ் (Soyabeans); (தானியம்) முதலியவற்றை மாடுகளுக்கு அரைத்துக் கொடுக்கிறார்கள். தீனிதரும் விஷயத்தில் அளவு முறையை (Fat Percentage Basis) அவர்கள் கையாளுகின்றனர்.

காளைகளுக்குக் காய் அடிக்கும் முறையில் அதிக அளவுக்குக் கவனம் செலுத்தப் படுகிறது. அதனால் பொதுவாக விவசாயத்திற்கும், விவசாயிகளுக்கும், காளைகள் வளர்ப்பின் மூலமும் நல்ல உதவிகள் கிடைக்கின்றன.

அங்குள்ள விவசாயம் செய்யும் மக்கள் சிறந்த வாழ்க்கைதான் வாழ்கின்றார்கள். என்றாலும் மற்ற தொழில்கள் செய்பவர்களைவிட, அதிக அளவுக்குக் கஷ்டப்பட்டு உழைத்தாக வேண்டியுள்ளது. உழைப்பைப் பொறுத்தவரையில், நாமும் அவர்களும் ஒன்று என்று தான் சொல்ல வேண்டும்.

மிஷினரியை உபயோகிப்பதன் காரணமாக சில வகைப்பட்ட வேலைகளைமட்டும் அவர்கள் சுலபமாகச் செய்துகொள்ள முடிகிறது. ஆனால், பலதரப்பட்ட பெரும்பாலான வேலைகளை, அந்த விவசாயமக்கள் தங்கள் உழைப்பின் மூலமே நிறைவேற்றித் தீரவேண்டியிருக்கிறது.

எப்படித்தான் உழைத்து, எவ்வளவுதான் பலன் கண்டாலும், அங்கு ஓயாது உழைத்து வாழும் விவசாயக் குடிமக்களில் பெரும்பாலானவர்கள், இன்றைக்கும் கடன்காரர்களாகவே வாழ்கின்றார்கள்.

ஆனால், அவர்கள் அடைந்திருக்கின்ற கடன்க ளெல்லாம் தனிப்பட்ட யாரிடமும் இல்லை.

விவசாய சொசைட்டிகளிடமே கடன் வாங்கிக் கொள்கின்றனர். இந்தக் கடன் தரும் சொசைட்டிகள் விவசாயிகளின் தகுதியையும், பயிர்களின் தரத்தையும் வைத்துக் கடன் தருகின்றன. இந்தக் கடனை, அவர்கள் 40 வருடத் தவணைகளில் கட்டிவிடவேண்டும்.

இந்த சொசைட்டிகள், விவசாயிகளுக்கு "புல் டோசர்" ((Bull Dozer)) களைக் கூடக் கடனில் தரு கிறது. இங்கெல்லாம் பயிர்கள் விளையாமல் இருப்ப தற்குக் காரணமே கிடையாது. ஆதலால், கடன்பட்ட விவசாயிகளில் பெரும்பாலானவர்கள், வாங்கிய கடனை ஒழுங்காகத் தவணைகளில் கட்டி முடித்து விடுகின்றனர்.

அதேசமயம், சில விவசாய மக்கள், சில சமயங்களில் வாங்கிய கடனைக் கட்ட முடியாத நிலை ஏற்பட்டு, நிலத் தையும், கடனுக்கு வாங்கப்பட்ட கருவிகளையும், கடன் பட்ட சொசைட்டியிடம் ஒப்படைத்துவிட்டு வெளியேறி விடுகிறார்கள்.

5 சதவிகிதக் குறைந்த வட்டிக்குக் கடன் கிடைத்தும் நிரந்தரமான விளைச்சல் இருந்தும், மிஷினரிகள் பயன் படுத்தப்பட்டும், விவசாய மக்களுக்கு மிச்சமாவது, "கையும் காலும்தான்" என்ற நிலை அங்கேயும் இருக்கிறது என்பதை எண்ணினால், சஞ்சலம்தான் ஏற்படுகிறது.

அங்கே, நான், சில விவசாயிகளின் வீடுகளுக்குச் சென்றிருந்தேன். அவர்கள் என்னை ஒரு விவசாயக்

குடும்பப் பெண் என்று தெரிந்ததும் அளவுகடந்த மகிழ்ச்சியோடு வரவேற்று உபசரித்தார்கள். அவர்களிடம் சில உண்மைகளைக் கேட்டறிந்தேன்.

நானும் விவசாயக் குடும்பத்தில் பிறந்தவள் என்ற காரணத்தாலோ என்னவோ, அங்கு விவசாயிகள் வீட்டிற்குள் நுழைந்தபோது என்னையும் அறியாத ஒரு குடும்பப் பாசம் எனக்கு ஏற்பட்டது. அந்த விவசாயக் குடும்பத்தினர் என்னோடு மனம்விட்டுப் பேசினார்கள்.

தங்களுக்காகச் சர்க்கார் செய்துவரும் நலன்களையும், உதவிகளையும் தெரிவித்து, அப்படியிருந்தும்கூட இயற்கையாக ஏற்படும் சில சங்கடங்களையும் விளக்கினார்கள். இவற்றையெல்லாம் நீக்கி, அவர்கள் பூரணத்துவம் பெற்ற பொருளாதார வாழ்வை அடைய வேண்டுமென்றால், அதற்குத் தகுந்த சூழ்நிலையைக் காலம்தான் உருவாக்க வேண்டும்.

அமெரிக்காவில், விவசாயிகளின் நலன்களையும், சாதக பாதகங்களையும் மனம்விட்டு விவாதித்துக் கொள்வதற்கு, விவசாயிகளை அங்கத்தினர்களாகக் கொண்ட விவசாய யூனியன் அமைப்புகள் அங்கு உள்ளன. இவை மூலம் விவசாயிகள், தங்களுக்குள்ள துன்ப துயரங்களைக் களைந்தெறிவதற்கான வழிவகைகளைக் காண முயற்சிக்கின்றனர்.

விவசாய மக்கள், கூட்டுறவு ஸ்தாபனத்தின் மூலம் இங்கே பலப்பட்டு இருக்கும் காரணத்தால், பல அடிப்படையான அம்சங்களில், தங்களுக்கேற்ற வசதிகளைச் செய்துகொள்ள முடிந்திருக்கிறது.

இதற்கு உதாரணமாகக் குறிப்பிடவேண்டுமானால் ஓரிடத்தில் அவர்கள் அணைகட்டியிருப்பதையும், மின்சார நிலையத்தை அமைத்திருப்பதையும் குறிப்பிடலாம்.

நமது, கீழ்பவானி அணையைப்போல் ஒன்றைக்கட்டி, வாய்க்காலை வெட்டியிருக்கிறார்கள். அதைப்போலவே, சிறந்ததொரு மின்சார நிலையத்தையும், (Electric Pawer Station) ஸ்தாபித்திருக்கிறார்கள். இதனால் பல விவசாயிகள் பலன் பெறுகின்றனர்.

இவற்றிற்கான வரி வசூலையும் விவசாயக் கூட்டுறவு ஸ்தாபனமே வசூலித்து வருகிறது என்பது, விவசாயிகளின் ஒற்றுமைக்கும், ஆக்க பூர்வமான வேலைகளுக்கும் முன்னுதாரணமாகும்.

இந்த விவசாய மக்களுக்குப் பல வகைப் பட்ட கடன்கள் இங்கே கிடைத்துக் கொண்டிருக்கின்றன. இந்த நிலை எதிர்காலத்தில் விவசாயிகள் வாழ்வில் "இன்பம்" கிடைக்கும் என்பதை நம்ப வைக்கிறது.

பில்லிங்ஸ் (Billings) என்ற ஒரு இடத்திற்குப் போயிருந்தேன். அது பஞ்சப்பிரதேசம் என்று என்னிடம் கூறினார்கள். இந்த இடத்தில், கால்நடை வளர்ப்பவர்களே நிறைந்து காணப் படுகிறார்கள்.

இங்கு, கால்நடை வளர்ப்பவர்களை ரேஞ்சர்ஸ் (Ranchers) என்று அழைக்கிறார்கள். அவர்களில் ஒருவர் என்னை விமான நிலையத்தில் சந்தித்து, ஆசை முகம் காட்டி வரவேற்று உபசரித்து அளவளாவினார்.

அந்தப் பகுதியிலெல்லாம் சர்க்கார், விவசாயிகளுக்குச் செய்திருக்கும் பாராட்டத்தக்க அம்சம் என்னவென்றால், மார்க்கெட்டிற்காக எந்தெந்தப் பயிரை எந்த அளவிற்குப் பயிரிடவேண்டும் என்பதை நிர்ணயித்திருப்பதுதான். அமெரிக்க சர்க்காரின் இந்த நல்ல முடிவில் நிரந்தரமான—நம்பிக்கையான—இலாபகரமான பலன்களை விவசாயிகள் எதிர்பார்க்க முடிகிறது.

விளைச்சலை (பயிர்களை) நம்பியிருக்கும் விவசாயிகள், இந்த முறையின் மூலம் பெரும்பாலும் ஏமாற்றம் அடைவது கிடையாது.

நம் நாட்டிலோ இதற்கு நேர்மாறான நிலைமை.

இந்த வருடத்தில் இங்கு பருத்தியோ, அல்லது மஞ்சளோ, கிராக்கியாகவும், விலை சற்று அதிகமாகவும் விற்கிறது என்றால், அடுத்த வருடமே விவசாயிகளில் நூற்றுக்கு எண்பது சதவிகிதத்தினர், குறிப்பிட்ட ஒரு பொருளையே, போட்டி போட்டுக்கொண்டு அதிகமாகப் பயிரிட்டு விடுவார்கள். பிறகு பரவலாக விளைந்திருக்கும் ஒரு சில குறிப்பிட்ட பொருள்களை விற்கப் போகும் காலத்தில், அவற்றிற்குள்ள மதிப்புத் தானாகக் குறைந்து விடுகிறது. விலையும், வானில் வீசப்பட்ட கல்போல வீழ்ந்து விடுகிறது. கடைசியில் பாடுபட்ட கூலிக்குக் கூடக் கட்டிவராமல் போய்விடுகிறது. இதனால், விவ சாயிகள் கடன்காரர்களாக வாழ வேண்டிய நிலைமையும் உண்டாகிவிடுகிறது.

இதன் காரணமாக ''ஏழ்மை'' தானாகவே வளரு கின்ற துர்ப்பாக்கிய சூழ்நிலைஉண்டாகிறது. இந்தியாவில் விவசாயத்தையே நம்பிவாழும் இந்திய விவசாயி களுக்கும், அதை எதிர்பார்த்துப் பிழைக்கவேண்டிய இந்திய மக்களுக்கும், விவசாயப் பிரச்சினைகளில், ஒரு தெளிவான கண்ணோட்டம் இல்லாமற் போய்விடுமானால் வேளாள மக்களின் வாழ்வு, சுமையாகிவிடும்.

இனிமேலாவது அத்தகைய சூழ்நிலைக்கு நாட்டை வழிதவற விட்டு விடாமல் பாதுகாக்க வேண்டியது, தாயகப் பற்றும், பொது அனுபவமுமிக்க பெரியவர்களின் கடமையாகும்.

பெரும்பாலும் கருவிகளைக் கொண்டே வேலைகள் செய்தும், அமெரிக்காவில் விவசாய மக்கள் கடன்காரர்களாக வாழவேண்டியுள்ளதென்றால், முழு உடல் உழைப்பின் மூலமே விவசாயத்தை நடத்துகின்ற நமது இந்திய விவசாயமக்களின் வாழ்வு எந்த நிலைக்குப் போகும் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்.

இது குறித்து, நாம் . ஒரு புது வழியை-முறையைக் கண்டு பிடித்தாகவேண்டும். இல்லாவிட்டால் ''உழவர் உலகம்'' தாழ்வுற்றுவிடும். எதிர்காலம் இருள் சூழ்ந்த தாக ஆகும்.

இந்தியாவைப் பொறுத்தவரையில், விவசாயிகளின் சுக துக்கங்களை வைத்துத்தான் நமது நாகரிக மேம்பாடும் சமுதாய முன்னேற்றமும் அமையும். இதை நாம் மறந்துவிடக்கூடாது. அமெரிக்காவில் நான் இருந்த போது, அடிக்கடி எனக்கு இந்த எண்ணமே ஏற்பட்டுக் கொண்டிருந்தது.

இதுபற்றி நான் சிறிது அதிகமாக வலியுறுத்திக் கூறியது தவறானால், மன்னிக்க வேண்டுகிறேன். எனக்குப் பட்ட கருத்தை நான் சொல்லாமல் இருக்க முடியாதல்லவா ?

இந்த இடங்களையெல்லாம் சுற்றிவிட்டுப் புறப்பட்டு பாஸ்ட்டன் (Pastan) போய் விமானத்திலிருந்து இறங்காமலேயே நியூயார்க், சென்று இரவு 8 மணிக்கு அமெரிக்கன் ஏர்லைன்ஸ் விமானத்தில் கிளம்பி 10 மணிக்கெல்லாம் வாஷிங்டன் வந்தோம். அங்கு, ஹோட்டலுக்குப் போய்ச் சேருவதற்கு, இரவு 11 மணியாகி விட்டது. இங்குதான் 15 நாட்கள், தூதுக் குழுவினர் தங்கி இருந்தோம்.

வாஷிங்டனில் தங்கியிருந்த சமயத்தில், கேன்சஸ் சிட்டி (Kansas City) கொலம்பியா (Colambia) சிக்காக்கோ (Chicago) கென்ட்டக்கி (Kentacky) டென்வர் (Denver) ஆகிய இடங்களையெல்லாம் சுற்றிப் பார்த்தோம். முக்கியமான ஒவ்வொரு இடங்களிலும் எங்களுக்கு வகுப்பு (Class)கள் நடந்தன.

கென்ட்டக்கியில் இருந்தபோது, எனக்கு ஊர் நினைவும், குழந்தைகள் ஞாபகமும் அதிகமாகி, மனதிற்கே, சங்கடமாக இருந்தது.

இங்குதான் என் அருமைத் தந்தையின் நினைவுநாள் வந்தது. (அக்டோபர், 5.) எனது தந்தையின் நினைவு நாளை இந்தியாவிலிருந்து இங்கு வந்து வாழும் திரு. சிங், என்பவர் வீட்டில் பிரார்த்தனை செய்து அமைதியாக அந்த நாளைக் கழித்தேன்.

ஒரு நாள் கூட்டுறவுப் பண்ணையைப் பார்த்தோம் அங்கு எங்களுக்குப் பண்ணையின் வேலை முறைகளை விளக்கிக் காண்பித்தார்கள். பண்ணையைப் பார்த்துத் திரும்பும் போது ஒரு அழகான பள்ளிக்குச் சென்றிருந்தோம்.

இந்தப் பள்ளியில் 10, வயது முதல் 18, 20, வயது வரையுள்ள ஆண், பெண், குழந்தைகள் கல்வி, பயின்று வருகின்றனர். நாங்கள் சென்ற நேரத்தில், பள்ளிக் குழந்தைகளெல்லாம் விளையாடிக்கொண்டிருந்தார்கள். அந்த விளையாட்டு சாதாரண விளையாட்டல்ல! ராஜா—ராணி (King and Queen) விளையாட்டு. இந்த அழகான விளையாட்டுப் போட்டியிலே வெற்றி பெறுகிற ஆணையும், பெண்ணையும், ராஜா—ராணி என்று குழந்தைகள் தேர்ந்தெடுக்கின்றனர். ராஜா—ராணி எனத் தேர்ந்தெடுக்கப் படும் இருவரும், அழகு, அறிவு, திறமை, ஆகிய எல்லா

வற்றிலும் திறமை மிக்கவர்களாக இருக்க வேண்டும். அப்படி இருந்தால்தான் ராஜா—ராணியாக முடியும்.

இந்தப் பொருள் பொதிந்த விளையாட்டின் மூலம் சிறு வயதிலேயே குழந்தைகள் சுதந்திரமாக—சுய சிந்தனையுடன் ஒருவரை, அல்லது ஒரு பொருளைத் தேர்ந்தெடுக்கும் சக்தியைப் பெறுகிறார்கள். அதன் மூலம், அவர்களுடைய இளம் உள்ளங்களில் மகிழ்ச்சியும், திருப்தியும் நிலவுகின்றன.

பிஞ்சுப் பருவத்திலேயே, குழந்தைகளின் மனங்களில், இத்தகைய தன்மைகள் வளருவதால் எதிர்காலத்தில், அவர்கள் சிறந்த மேதைகளாகவும், புகழ்மிக்க விஞ்ஞானிகளாகவும், வலிமை மிகு வீரர்களாகவும், கற்பனை வளமுடைய கவிஞர்களாகவும் வளர முடியும்.

அவர்களுடைய வளர்ச்சிக்குத் தகுந்தவாறு, அறிவு வளர்ச்சிக்கான கேள்விகளும், ஆசிரியர்களால் கேட்கப்பட்டு, பதில்கள் பெறப்படுகின்றன. குழந்தைகளின் பதில்களில் திருப்தியில்லாவிட்டால் விளக்கங்கள் கூறி, தவறைத் திருத்தி பொறுமை மிக்க அந்த ஆசிரியர்கள், புரிய வைக்கிறார்கள். குழந்தைகள் பால் அங்கு காட்டப்படும் அக்கறை என் மனதை நெகிழச் செய்தது. இந்த இளங் கிள்ளைகள்தானே, நாளை உலகத்தின் நிழல்தரும் மரங்கள்? இந்தக் குழந்தைச் செல்வங்களின் அழகாட்டப் போட்டியை, இரவு 7 மணி முதல் 11 மணி வரையிலே நாங்கள் பார்த்து மகிழ்ந்தோம்.

பின், இங்கிருந்து புறப்பட்டு டென்வர் (Denver) என்ற ஸ்தலத்திற்குப் புறப்பட்டு, சிக்காக்கோ (Chicogo) நகரில் இறங்கி, முதல் தடவையில் பார்க்காமல் விட்டுவிட்ட சில இடங்களைப் பார்த்துவிட்டு, இங்கிருந்து

விமானம் ஏறி, 21 மைல் தொலைவிலிருக்கும் சேர வேண்டிய இடமான டென்வரை, அடைந்தோம். இங்கு சேர்ந்தவுடன், ஊரைச் சுற்றிப் பார்த்து வரவேண்டு மென்ற ஆசையில் சாமான்களை வைத்துவிட்டுக் கிளம்பினோம். அதற்குள்ளாக, சுள்ளெறும்பு போன்ற சுறு சுறுப்புடையவரும், ஓய்வின்றி, சலிப்பின்றி வேலை செய்ப வருமான எங்கள் தூதுக்குழுத் துணைவரும், நண்பருமான டெக்னிக்கல் லீடர் (Technical Leader) திரு. கிளப், (Mr. Glaf) அவர்கள், அடுத்த நாள் எங்களுக்கு நிகழ்ச்சி நிரல் தயாரித்துக்கொண்டு வந்துவிட்டார். அதைப் பெற்றுக் கொண்டு, ஊர்வலத்திற்குப் புறப்பட்டு விட்டோம்.

கடை வீதிகளின் அழகையும், எங்களுக்குப் பிடித்த மான மக்கள் முகங்களையும், வேலை முறைகளையும், வான் நோக்கி நிற்கும் வனப்பு மிக்க மாளிகைகளையும், பார்த்து விட்டுத் திரும்பினோம்.

இந்த ஸ்தலத்திலிருந்து 100 மைல் தொலைவிலுள்ள அழகு தவழும் ஒரு மலைப் பிரதேசத்திற்கு நான் சென்றேன். இந்த மலையில் குடியிருப்பவர்கள் ஒரு அமெரிக்கக் குடும்பத்தார். அவர்கள் இந்தியாவில், ஏழாண்டுக் காலம் தங்கி இருந்து, நமது இந்தியத் தேசீயக் காங்கிரசில் உழைத்திருக்கிறார்கள். அந்த, தியாக உள்ளம் படைத்தவர்கள் குடும்பம் அங்கே இருந்தது.

அந்தக் குடும்பத்தின் தலைவியான அமெரிககப் பெண்மணி தந்த மரியாதையும், வரவேற்பும் என்னை மிகவும் மகிழ்வித்தது.

நான் வரும் வரையில், என் நிழலைப்போல் அருகிலேயே இருந்து வசதிகள் செய்து கொடுத்து மகிழ்ந்தார்—மகிழ்வித்தார்.

தங்கள் இடத்திற்கு வந்திருக்கும் விருந்தினரைத் திருப்திப்படுத்துவதற்காகத் தங்களால் முடிந்தவற்றையெல்லாம், அவர்கள் வசதிக்குத் தகுந்தவாறு செய்து கொடுக்கிறார்கள். நான் திரும்பும் நேரத்தில், அந்த அன்புள்ளம் பூண்ட அமெரிக்கச் சகோதரியைப் பிரிந்து வரவே எனக்கு மனமில்லை.

அவர்களுக்கும் அதே நிலைமைதான். நாட்டிற்கு நாடு, ஏற்படும் கலாச்சாரத் தொடர்புகளாலும், தொழில் முறைச் சகோதர உறவுகளாலும், உலகத்தின் பொது அறிவு வளர்ச்சியும், அன்புத் தொடர்பும், நாகரிக மேம்பாடும் செழித்தோங்கும், சிறப்புற்று நிற்கும், சீர் பெற்று வளரும் என்கின்ற உண்மையை, எனது அமெரிக்கப் பயணத்தின்போது நான் நன்றாக உணர்ந்து கொண்டேன்.

நான், அங்கிருந்தபோது, அந்தப் பச்சை படர்ந்த—கனி மரங்கள் அடர்ந்த அழகைப் பரப்பும் மலைமீது உலவி வந்தேன். பனிப்படலம் உடலை நனைத்தது. மேகக் கூட்டங்கள் ஒன்று திரண்டு வந்து கண்களுக்கு வெண் திரையிட்டன. நடக்க நடக்க என்னையும் அறியாத புது இன்பம்.

அப்போது, எனது அருமைக் குழந்தைகளை நினைத்துக் கொண்டேன், அவர்களும் நம்மோடு இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்குமே என்று எண்ணிக்கொண்டேன்.

மறுநாள் விடிந்தது. இன்றைக்குக் குளிர் நிலைமை மாறி, வெப்பம் சிறிது அதிகமாயிற்று. நானும் எங்கள் இருப்பிடமான டென்வருக்குத்திரும்பவேண்டியநிலைமை. அன்று டென்வருக்குத் திரும்பி வந்தேன், அங்கு மலைப் பிரதேசத்திலிருந்த அமெரிக்கச் சகோதரியின் தாய்

வீட்டிற்கு அழைத்திருந்தார்கள். அங்கும் நல்ல வரவேற்பு. தேனீர் தந்தனர். சில மாணவர்களும் அழைக்கப் பட்டிருந்தார்கள்.

அந்த இளம் மாணவர்கள் இந்தியாவைப் பற்றியும், நமது கலாச்சார உறவு குறித்தும், விவசாய வளர்ச்சியின் தன்மையை அறியவும் பல கேள்விகள் கேட்டனர்,

அநேகமாக எல்லாக் கேள்விகளுக்கும் பதில் அளிக்கப்பட்டது. இந்த நிகழ்ச்சியை முடித்துக்கொண்டு திரும்பிவிட்டேன்.

தூதுக் குழுவினருக்கு இங்கேதான் முக்கியமான புல் வளர்ச்சி பற்றியும், புல் பாதுகாப்பு பற்றியும் நல்ல விளக்கவுரை தரப்பட்டது.

இங்கே இன்னொரு நாள் முக்கியமான விவாசய யூனியன் கூட்டம் நடந்தது. இந்தக் கூட்டத்தில் விவசாய உலகத்தில், நல்ல அனுபவமிக்க சிலர் சொற்பொழி வாற்றினார்கள்.

அவர்கள் பேச்சில் கூட்டுறவுப் பண்ணைகளில் கிடைத் துள்ள நல்ல பலன்களைப் பற்றியும், எதிர்காலத்தின் வளர்ச்சிக்காகச் செய்யப்பட்டுள்ள திட்டங்கள் பற்றியும், அதற்காகச் செய்ய வேண்டிய எதிர்கால வேலை முறைகள் குறித்தும், பேசினார்கள்.

அந்தச் சொற்பொழிவிலிருந்து பல புதிய செய்தி களையும், கருத்துக்களையும் நாங்கள் உணர்வு பூர்வமாகத் தெரிந்து கொள்ளும் சிறந்த வாய்ப்புக் கிடைத்தது. இந்தச் சிறப்பு மிக்க கூட்டம் இங்கிருக்கும் விவசாய யூனியன் அலுவலகத்தில் நடைபெற்றது.

இங்கு எங்களுக்காக நடத்தப்பட்ட கருத்தரங்குகள், பயனுள்ளவையாக இருந்தன. இந்நிகழ்ச்சிகள் முடிந்

ததும் என் வேலைகளை முடித்துக்கொண்டு டென்வரி லிருந்து நான்மட்டும் பில்லிங்ஸ் (Billings) புறப்பட்டேன்.

இங்கு ஒரு அமெரிக்கத் தம்பதிகள் வரவேற்று உப சரித்தார்கள். அவர்கள் இல்லத்தில் தங்கியிருந்தேன்.

அங்கே, என்னைச் சந்திக்க வந்திருந்த ஒரு ஆங்கிலப் பத்திரிகை (Billings Gazett) நிருபர் என்னைப் பேட்டி கண்டு பேசுவதற்கு உதவும்படி கேட்டார்கள். நானும் சரி என்றேன். அவர் என்னிடம் எனது அமெரிக்கப் பயணத்தைப் பற்றியும் நம் நாட்டு விவசாய—கால்நடை வளர்ப்பு பற்றியும் கேள்விகள் கேட்டார். என்னால் முடிந்த வரையில் பதிலளித்தேன். எனது பேட்டியில் நிருபர் மிகவும் திருப்தி அடைந்ததாகக் கூறினார் (அந்தப் பத்திரிகை நிருபரின் பேட்டிச் சுருக்கம் வேறொரு இடத்தில் மொழி பெயர்த்துத் தரப்பட்டுள்ளது.)

என்னுடைய பேட்டியைப் பிறகு பத்திரிகையில் பிர மாதமாக வெளியிட்டிருந்தார்கள். இங்கிருந்து நான் என்னுடைய தம்பியைப் பார்ப்பதற்காக மிஸ்ஸூலா (Missoula) பகுதியிலுள்ள மோண்டானா (Montana) சென்றேன். என்னுடைய தம்பி, மோண்டானா சர்வ கலா சாலையில் ஆலைத்தொழிற் கல்வி பயின்று கொண்டிருக் கிறார். அங்கு விமான நிலையத்திற்கு வந்து என் தம்பி என்னை அழைத்துக்கொண்டு சென்றார்.

நீண்ட நாட்களுக்குப் பிறகு என் தம்பியை அமெரிக் காவில் கண்டபோது, என் மனமெல்லாம் எப்படியோ இருந்தது.

உடன் பிறந்த "பாச உணர்ச்சி" எத்தகைய சக்தி யுடையது என்பதை இத்தகைய நேரங்களில்தான் புரிந்து கொள்ள முடியும்போல இருக்கிறது.

இங்கு தங்கியிருந்த நாட்களில் இந்தப் பகுதியிலுள்ள சில முக்கிய இடங்களைப் பார்த்தேன்.

இங்கிருக்கும் கூட்டுறவு சொசைட்டி, சொந்தமாக குருடாயிலிலிருந்து பெட்ரோல் எடுக்கிறது. இதை நேரில் போய்ப் பார்த்தேன்.

இன்னொரிடத்தில் இயந்திரங்களால் மரங்களை அறுக்கும் தொழிற்சாலையையும் பார்த்துவந்தேன்.

என் தம்பியோடு தங்கியிருந்த நாட்களில் நானே சமையல் செய்தேன். ஒரு ஞாயிற்றுக்கிழமை அங்குள்ள மாதா கோயிலுக்குக் (Church) கூடப்போய் வந்தேன்.

இந்தப் பகுதியின் ஒரு புறத்திலிருக்கும் காட்டு எருமைகள் அதிகமுள்ள "பைசன்ரேஞ்ச்" (Bysanrange) என்ற இடத்திற்குப் போனேன். இங்கு போகும்போது "மெர்க்குரி பென்" (Mercuryben) என்ற ஒரு புதுவித மான ஜெர்மன்கார் கிடைத்தது.

நமது ஊர்களில், கார்கள் ஓடும்போது நாய்களும் ஓடிவருமல்லவா? இதைப்போலவே இந்தப் பகுதியில், காரைக் கண்டால் மான்கள் ஓடிவருகின்றன. காரைச் சுற்றிச் சுற்றி வருகின்றன. இந்தப் பகுதியைச் சுற்றிப் பார்த்துவிட்டுத் தம்பியின் இருப்பிடம் திரும்பினேன்.

இனிநான் என் தூதுக்குழுவினருடன் கலந்துகொள்ள வேண்டுமல்லவா? ஆகவே, நானும் என் தம்பியும் ஒரு டாக்சியில் விமான நிலையம் சென்று, அங்கே என் தம்பியிடம் விடைபெற்றுக்கொண்டு மோண்டானுவை விட்டுக் கிளம்பினேன்.

என் தம்பியுடன் தங்கியிருந்த சமயம், அவருடைய நல்ல நண்பர்கள் பலர் என்னை வந்து சந்தித்தார்கள்

உரையாடினுர்கள். என்னுடைய வரவிற்காக மிக்க மகிழ்ந்தார்கள்.

எனக்கும், என் தம்பியைக் கண்டதும் பார்க்கவேண்டு மென்ற மனச்சுமை குறைந்தது.

நான் மோண்டானுவில் விமானம்ஏறி "சீ ஏட்ல்" (Sea Adle) என்ற இடத்தில் விமானம் மாற்றி சான்பிரான் சிஸ்க்கோ (Sanfransisco) விற்கு வெஸ்ட்டர்ன் ஏர் லைன்ஸ் (Western Airlines) விமானத்தில் போய்ச் சேர்ந்தேன்.

இங்கு வந்து சேருவதற்குள் பொழுதாகி விட்டது. இங்கே எங்கள் குழுவினருக்குத் தொடர்ந்து வகுப்புகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. இங்கிருக்கும்பொழுது கலிபோர்னியா (Colifornio) விற்குப்போய் அங்குள்ள அணுசக்தி உற்பத்தி நிலையத்தைப் பார்த்தோம். அணு சக்தி உற்பத்தி நிலையத்தைக் காணும் எவரையும், அது அந்த விஞ்ஞானத்தின் கட்டுப்படுத்த முடியாத வளர்ச்சி யையும் விஞ்ஞானத்தால் எதிர்கால சக்திமிக்க, ஆக்க பூர்வமான வேலைகளையும்—பலன்களையும் சிறிது நேரம் நினைத்துப் பார்க்க வைத்தே தீரும்.

வானம்பாடியாக இன்றைக்கு வளர்ந்துவிட்ட மனித சமுதாயம்,நாளை ஒருநாள்,நாம் கூறிவந்தமேல் உலகத்தில் வாழ்கின்ற போது விஞ்ஞானத்தையும், அது வளர்ந்து விட்ட வேகத்தையும் நமக்குப் பின்னுல் வரந்போகும்— வாழப் போகும் புதிய பரம்பரையினர் பூரணமாக அனு பவிப்பார்கள்.

இங்குள்ள சாதாரண மக்கள்கூட, விஞ்ஞானமும், அணுவளர்ச்சியும், எதிர்காலப் போர்களற்ற சகாப்தத் தையே உருவாக்க வேண்டுமென விளைகிருர்கள். ஏனென்ருல் இதுவரையில் நடைபெற்று, வரலாறுகளை

உருவாக்கி இருக்கும் போர்களெல்லாம் உலகப் பாமர மக்களைத் தோல்விக்கும், ஏழ்மைக்குமே அழைத்துள்ளன. விஞ்ஞான மகிமைக்கு இலக்கணமாக நிற்கும் அணுசக்தி நிலையத்தை நாங்கள் பார்த்துவிட்டுத்திரும்பி வேறொரு இடத்திலே நடைபெற்ற, ''கௌபாய்'' (Cowboy play) என்ற விளையாட்டைப் பார்ப்பதற்குச் சென்றோம்.

இந்த ஆட்டம் இங்கு புகழ்பெற்றது. இதில் பெண்களிலே நூற்றுக்குத் தொண்ணூறு சத விகிதத்தினர் கலந்து கொள்கின்றனர். இந்த விளையாட்டு ஏறத்தாழ நம் நாட்டில் புகழ்பெற்ற ஜல்லிக்கட்டுப் போலவே இருக்கிறது.

ஒவ்வொருவரும் குதிரையில் உட்கார்ந்துகொண்டு சிறிது தூரத்திலிருக்கும் மாட்டின் கழுத்தில் கயிறிட்டுச் சுறுக்கிட வேண்டும். இங்கே பிரபலமாகியிருக்கும் இந்த விளையாட்டுப் போட்டியில் ஒருவர் 7 நிமிடங்களில் கயிறிட்டுக் கட்டி முடித்தார். இந்த நேரம் இந்தப் போட்டிக்குக் குறைவான நேரமாகும். இவ்வளவு குறைந்த நிமிடங்களில் எவரும் கட்ட முடியாது.

பார்ப்பதற்கு இந்த விளையாட்டுப் போட்டி மிகவும் வேடிக்கையாகவும், பொழுது போக்காகவும் இருந்தது.

இந்த நாட்டு மக்கள் இத்தகைய விளையாட்டுப் போட்டிகளில் அதிகமாக ஓய்வு நேரங்களில் ஈடு படுகிறார்கள். இதைப் பார்த்துக்கொண்டு, தூதுக் குழுவினருக்காக இங்கே நடைபெற்ற வகுப்பில், நிலங்களுக்கு நாம் தண்ணீர் பாய்ச்சும் முறைகளைப் பற்றிய அவர்களின் அனுபவத்தைத் தெளிவாக எங்களுக்கு விளக்கினார்கள்.

அந்த விளக்க உரையை, எழுத்தின் மூலம் விளக்கிக் கூறுவது சிரமம். இந்த நிகழ்ச்சி முடிந்ததும், மறுபடியும் சான்பிரான்சிஸ்க்கோவிற்குத் திரும்பினோம்.

சான்பிரான்சிஸ்க்கோவில், நகரத்து அலங்கார விளக்கு அமைப்புகள் அழகுக்கு அழகு செய்கின்றன.

வானத்துத் தாரகைகளெல்லாம் ஒன்ருகக் கூடிவந்து, கண்சிமிட்டி விளையாடுவது போல, மின்சார விளக்குகள் மின்னுகின்றன. அந்த வண்ண விளக்குக் காட்சிகள் நகரத்தின் அழகை, இரவு நேரங்களில் அழகால் அலங்கரிக்கின்றன.

இவை காண்போருக்குக் களிப்பூட்டும் காட்சிகளாகும்.

இந்த அழகு நகரத்தில், கேரள நாயர் சொசைட்டியில் அங்கம் வகிக்கும், திரு. பிள்ளை என்பவர் இருக்கிருர். அவர் எங்களுக்கெல்லாம் விருந்து வைத்து உபசரித்தார்.

இங்கிருந்து, பெர்க்லி, டேவிஸ் என்ற இடங்களுக்கெல்லாம் போனேம். டேவிஸ் சென்றிருந்தபோது, இங்கிருந்து 100 மைல் தொலைவிலுள்ள சீக்கியர்கள் வாழும் பகுதிக்குச் சென்றிருந்தோம். அங்குள்ள சீக்கியர்களின் கோயிலுக்கும் போயிருந்தோம். அந்தப் பகுதி முழுவதுமே நமது பஞ்சாபிகள் நிறைந்து காணப்படுகிருர்கள்.

எங்களைக் கண்டவுடன், அடடா, அவர்களுக்கு எவ்வளவு அன்பும், ஆர்வமும் இருந்தது தெரியுமா? என்ன இருந்தாலும், எங்குபோய் வாழ்ந்தாலும், யாரைத்தான் தாய்ப்பற்றும், தாயகப்பற்றும் விட்டுவிடப் போகிறது?

எங்களுக்கெல்லாம் சிற்றுண்டி தந்தார்கள். ஹிந்தி மொழியில் வாழ்த்துரை வழங்கி, வரவேற்ருர்கள்.

எனக்கு ஹிந்தி தெரியாது. ஆதலால், முகபாவத்தி லிருந்து ஓரளவு அர்த்தத்தைப் புரிந்துகொண்டேன். அன்று இரவு உணவை முடித்துக்கொண்டு நான் சினிமா ஒன்றிற்குப் போயிருந்தேன். தியேட்டர் மிகவும் சௌகரியமாகவும், அழகாகவும் கட்டியிருக்கின்றனர்.

இங்கு எங்கள் வேலைகள் முடிந்ததும், டேவிஸ், மெரிஸ், வரும்வழியில் ஒரு வயலில் பல மனிதர்களின் வேலையைத் தானுகவே செய்து கொண்டிருந்த ஒரு இயந் திரத் தொழிலாளியைக் கண்டோம்.

அந்த இயந்திரம், வளர்ந்து நிற்கும் நெற்கதிரை அறுத்து, குப்பைகளை ஒதுக்கி, வைக்கோலை (புல்லை) விலக்கி, சுத்தமான நெல்மணிகளை அளப்பதற்குத் தயாராகக் கொட்டிக் கொண்டிருந்தது. இதைப் பார்த்துவிட்டு, அருகில் 4—H. கிளப்பில் உறுப்பினர்க ளாகியிருக்கும் மாணவர்களைப் பார்ப்பதற்காகச் சென்றோம்.

அந்த ஸ்தாபனத்திலுள்ள மாணவர்கள், பள்ளியில் படித்துக்கொண்டே தங்கள் வீடுகளில் கோழி, முயல், புறு, ஆகியவற்றை வளர்த்துக் கொண்டிருக்கிறுர்கள். அவர் களுக்குப் பெற்றோர்கள் கொடுக்கும் காசிலிருந்து (சேர்த்து வைத்து) அவற்றை வாங்குகின்றனர்.

கோழி, கோழிமுட்டை, மற்ற தாங்கள் வளர்க்கும் பறவைகளையும் அவர்கள் சிறிது சிறிதாக விற்று, அதில் வரும் தொகையையும் சேர்த்து வைத்து, மொத்த எண்ணிக்கையையும், பிராணிகளின் தரத்தையும், வளர்த்து வருகின்றனர். அவர்களுக்குத் தேவையான போது, பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்குக் கடன் தந்தும் உதவுகின்றனர்.

இப்படி வாங்கப்படும் கடனைக் குழந்தைகள், தங்களுக்குப் பணம் வரும்போது, நாணயமாகத் திருப்பித் தந்து விடுகிறார்கள்.

இத்தகைய பண்பாட்டில் அவர்கள் வளருவதால், இளவயதிலிருந்தே சோம்பேறிகளாவது தடுக்கப் படுகிறது.

இரண்டாவதாக அவர்கள் பொறுப்புணர்ச்சியைப் பாதுகாக்கவும் பழக்கப்படுகிறது ; மூன்றாவதாக, அவைகளைச் செய்வதன் மூலம் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு உதவும் கடமைகளையும் ஒழுங்காகக் கற்றுத்தரப் படுகிறது ; நான்காவதாக, மேற்கண்ட வேலைகளை அவர்களைச் செய்ய வைப்பதன் மூலம், அந்த இளம் உள்ளங்களில் பூரண சுதந்திர உணர்ச்சியை மலர வைக்க முடிகிறது.

இத்தகைய சிறந்த பண்புகள் அனைத்தும் ஒன்று சேர்ந்த நிலையில், அவர்கள் வளர்ந்தால் அவர்களின் எதிர்காலம் எவ்வளவு இன்பமாக இருக்கும் என்று எண்ணிப் பாருங்கள்! இந்த மாணவர்கள் அத்தனை பேருமே 4—H. கிளப்பின் அங்கத்தினர்களாகும். டேவிசிலிருந்து நாங்கள் மெடஸ்ட்டோ (Madasto) என்ற இடத்திற்கு வந்தபோது, வழியில் அங்கே, பல இடங்களிலுள்ள உணவு தானியங்களைச் சேகரித்துக் கொண்டிருந்த கப்பல் ஒன்றைப் பார்த்தோம்.

சேகரிக்கும் தானியங்களை, இருப்பு வைக்கும் இடத்திற்குக் கொண்டு செல்கிறார்கள். அங்கிருந்து, பல இடங்களுக்கு விநியோகிக்கப்படும். அருகிலே கோழிப் பண்ணை ஒன்றையும் பார்த்தோம்.

இங்குள்ள கோழிகளைத் தரையில் கால் ஊன்ற விடாதபடி கீழே பலகைகளை வைத்து அடித்துப் பலகை

மேடை அமைத்துள்ளனர். இருபத்துநான்கு மணி நேரமும் கோழிகள் உள்ள இடங்களில் இரவும், பகலும், மின்சார விளக்குகள் எரிந்துகொண்டே இருக்கின்றன.

இங்கு வளரும் கோழிகள், சராசரி, ஒவ்வொன்றும் $1\frac{1}{2}$ முட்டைகள் வீதம் இடுகின்றன. ஆனால், இந்த முட்டைகளின் மூலம் குஞ்சுகளைப் பெற முடியாது. காரணம் குஞ்சு பொறிப்பதற்கான சக்தி அவற்றிற்குக் கிடையாது. ஏன் ? இவையெல்லாம் செயற்கை முட்டைகள். தரப்படுகின்ற தரமான உணவு மூலமாக கோழிகள் முட்டை யிடுகின்றன.

இப்படிக் கோழிகள் ஒரு புறம் இருந்தாலும், இன்னொருபுறத்தில் குஞ்சு பொறிப்பதற்கென்றே தனி யாகக் கோழிகள் வளர்க்கப்படுகின்றன. (இந்தக் கோழிகள் இடுகின்ற முட்டைகள் இயற்கை முட்டைகள்.) செயற்கை முட்டைகளுக்குக் குஞ்சு பொறிக்கும் சக்தி இல்லாவிட்டாலும், முட்டைக்குள்ள எல்லா சத்தும் இதற்கும் உண்டு.

இந்தப் பண்ணையில் வளர்க்கப்படும் கோழிகள், இரவு பகல் தூங்காமல், முட்டையிடுவதே வேலையாக உள்ளன. இவற்றையெல்லாம் நான் தெரிந்தபோது நமது விவசாயிகள், இன்றில்லாவிட்டாலும் நாளை புது முறைகளைக் கையாண்டு, மேன்மை மிக்கவர்களாகி விடு வார்கள் என்ற நம்பிக்கை தோன்றியது.

இங்கிருந்து பிறகு மெடஸ்ட்டோ (Madasto) போனோம். அங்கே, ஆயில் செல் எடுக்கும் இடத்தை பார்த்துவிட்டு, தாவரங்களில் விழும் பூச்சிகளைப்போக்கு வதற்காக ஆராய்ச்சி நடத்தும் இடத்திற்கு நாங்கள் சென்றிருந்தோம். இந்த ஆராய்ச்சிக்கூடம், விவசாயி

களுக்குப் பல கோடிக்கணக்கான ரூபாய்களை மீதப்படுத்த உதவுகின்றது.

அடுத்தநாள், விவசாயிகளாகவே சொந்தமாகக் கட்டியுள்ள விவசாய மாளிகைக்குச் சென்று, அந்தக் கட்டிடத்தைக் கண்டோம். பார்ப்பதற்குப் பெரும் கட்டிடம்.

இதையும் பார்த்து முடித்துவிட்டு; ப்ரசினோ (Fresino) விற்கு அழைத்துச் செல்லப்பட்டோம்.

இங்குதான் திராட்சைப் பழங்களைச் சேகரிக்கும் இடத்தைப் பார்த்தோம். விவசாயிகளே சங்கம் ஒன்றை ஏற்படுத்தி, அதன்மூலம் திராட்சைகளைச் சேகரித்து, பதனப்படுத்தி, டின்களில் அடைத்து, விற்பனைக்காக வெளிநாடுகளுக்கு அனுப்பி வைக்கிறார்கள்.

இந்த வாணிபத்தின் மூலம் கிடைக்கும் இலாப மெல்லாம் விவசாயிகளுக்கே கிடைக்கிறது.

கூட்டுறவு வேலை முறைகளால் இத்தகைய நல்ல பலன்களை, விவசாயிகள் அடைய முடிகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

இதற்குத்தான் நமது மூதாதைகள், "தங்கம் செய்யாததைச் சங்கம் செய்யும்" என்று கூறினார்கள்.

பருத்தி அரைக்கும் ஜின்னிங் பேக்டரியையும், அமோனியம் சல்பேட் தயாரிக்கும் இடங்களையும் சென்று பார்த்தோம். அடுத்து பெக்கர்ஸ்பீல்ட் (Beckars Field) என்ற இடத்தில், கூட்டுறவுப் பருத்திமார்க்கெட் அலுவலகம் (Co. Operative Cotton Marketing Society) இருக்கும் இடத்தையும், பள்ளி ஒன்றையும் கண்டோம். பின், லாஸ் ஏஞ்சல்ஸ் (Las Angels) செல்லுகையில் ஒரு

இடத்தில் உப்புத் தண்ணீரை நல்ல தண்ணீராக மாற்றும் திருப்பணி நடக்கும் இடத்தைப் பார்த்து மகிழ்ந்தோம்.

லாஸ் ஏஞ்சல்ஸ் அருகேயுள்ள பள்ளி ஒன்றுக்கு தூதுக் குழுவினர் சென்றபோது, குழந்தைகளுக்கெல்லாம் பெண்களே பாடம் கற்பித்துக்கொண்டிருந்தனர்.

அங்கு 100 முதல் 200 குழந்தைகளுக்கு ஒரு ஆசிரியர் என்று இல்லாமல், 25 குழந்தைகளுக்கு ஒரு ஆசிரியர் வீதம் நியமித்திருக்கின்றனர்.

குறைந்த எண்ணிக்கை கொண்ட குழந்தைகளுக்கு ஒரு ஆசிரியர் சொல்லித் தருகின்றபோது, குழந்தைகள் பொறுமையாகவும், திறமையாகவும் கல்வி பயில்வதற்கான வசதி கிடைக்கிறது.

அதிக அளவு எண்ணிக்கை இருக்குமானுல், இந்த அளவுக்கு, ஆசிரியர்களால் போதிக்கவும் முடியாது. குழந்தைகள், புரிந்துகொள்வதற்கும் இயலாது. அது, ஆகாத காரியம்.

இந்தப் பள்ளி ஆசிரியர்கள், சொந்த விஷயங்களிலிருந்து, பொதுநல விஷயங்கள் வரையிலே குழந்தைகளுக்குச் சொல்லித் தருவது பாராட்டத்தக்க வழிமுறையாகும். சிறு வயதிலிருந்தே குழந்தைகள், இங்கே விளையாட்டாகவும், சிரமம் தெரியாமலும், பெரிய சிறந்த குணும்சங்களைக் கற்றுக் கொள்கின்றனர்.

மெரிலேண்ட் (Marryland) என்ற ஒரு இடத்திற்கு நாங்கள் சென்றபோது, திமிங்கிலங்களின் விளையாட்டைக் கண்டோம். திமிங்கிலங்களுக்கு, ஒருவர் பயிற்சி ஆசிரியராக இருந்துகொண்டிருக்கிருர். அவர், அந்த ஜீவன்களுக்கு, அற்புதமான குதியாட்டம், (Jamping)

கற்றுத் தந்திருக்கிறார். அவர், சொல்கிறபடியெல்லாம் பாவம் அந்தத் திமிங்கிலங்கள் தாண்டிக் குதித்து மனித வேலைகளைச் செய்கின்றன. இந்த வேடிக்கையைப் பார்த்துவிட்டு உலகப் புகழ் பெற்ற ஹாலிவுட்டிற்குச் சென்றோம்.

நாம், ஹாலிவுட்டைப்பற்றி இங்கு கேள்விப்பட்ட அளவுக்கு எனக்கு ஒன்றும் பிரமாதமாகத் தெரியவில்லை. நவம்பர் மாதம் 24-ஆம் தேதி இங்கு ஒரு முக்கியமான நாள். "நன்றி தெரிவிக்கும் நாள்" (Thanks Giving Day) என்று பெயர். நாடு முழுவதிலுமுள்ள மக்கள். இந்த நாளை, அவரவர்கள் சக்திக்கு ஏற்றவாறு கொண்டாடுகிறார்கள். இந்த நாள், உழைப்பவர்களுக்கு நன்றி தெரிவிக்கும் உயர்ந்த நாளாகக் கருதப்படுகிறது.

நாம், தைப் பொங்கலில் கால் நடைகளுக்கு நன்றி தெரிவிப்பது போன்றது இந்த நாள். இந்த நன்றி தெரிவிக்கும் நாளன்று, எங்கள் தூதுக் குழுவினர் நால்வரை, ஒரு குடும்பத்தார் விருந்திற்கு அழைத்திருந்தார்கள். அங்கு போய், எங்கள் விருந்தை முடித்துக்கொண்டு, நாங்களும் விருந்து வைத்த நல்லவர்களுக்கு பரஸ்பர நன்றியைத் தெரிவித்துக்கொண்டு திரும்பினோம்.

அவர்கள் வைத்த விருந்து பிரமாதமாக இருந்தது. அவர்கள் நாட்டிற்கு இந்திய மக்களாகிய நாங்கள் வந்திருப்பதற்காக, நன்றியும், மகிழ்ச்சியும் கொள்வதாக விருந்தின்போது அந்தக் குடும்பத்தினர் தெரிவித்தனர்.

அடுத்த நாள், தூதுக் குழுவிலுள்ள நாங்கள், 20 பேரும், எங்களுக்கு ஆரம்ப முதல் கடைசி வரையிலே, எங்கள் உற்ற வழிகாட்டியாகவும், துணையாளராகவும், அருமையான நண்பராகவும் விளங்கிய டெக்னிக்கல் லீடர் (Technical Leader) திரு. கிளப், (Mr, Glaf) அவர்களுக்கு,

நாங்கள் எல்லோருமாகச் சேர்ந்து விருந்து வைத்து, எங்கள் உள்ளம் நிறைந்த நன்றியை அவருக்குத் தெரிவித்தோம்.

நாங்கள் சென்ற இடமெல்லாம் எங்களை அன்பு முகம் காட்டி, ஆசையோடு வரவேற்று, எங்கள் தூதுக் குழுவின் வேலைகளுக்கு உதவி செய்த விவசாயக் கூட்டுறவுப் பண்ணை விவசாயிகளுக்கும், எங்களுக்கு எல்லா வசதி களையும் குறைவின்றிச் செய்து தந்த ஐக்கிய அமெரிக்க சர்க்காருக்கும் எங்கள் ஆழ்ந்த நன்றியைத் தெரி வித்தோம்.

பிறகு, மறுநாள் நாங்கள் அனைவரும், பகல் முழு வதும் நகரக் கடைவீதிகளைச் சுற்றி, அவரவர்களுக்குத் தேவையான பொருட்களை வாங்கிக்கொண்டு, சொல்ல வேண்டியவர்களிடமெல்லாம் சொல்லிவிட்டு, இரவு 12-மணிக்கு, லாஸ் ஏஞ்சல்ஸ் (Las Angels) நகரிலிருந்து கிளம்பி, ஹவாய் (Hawai)க்கு மறுநாள் அதிகாலை 3-30-மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். இங்கேயுள்ள இடங்கள், நம் தமிழகத்திலிருக்கும், குன்னூர் போலவும், திருச்செந்தூர் போலவும் காட்சி யளிக்கின்றன.

8 தீவுகளைக் கொண்ட இந்த இடத்திற்குத்தான் ''ஹவாய்'' என்ற பெயர் சூட்டியிருக்கிறார்கள்.

நாங்கள், இவற்றில் இரண்டு தீவுகளைப் பார்த்தோம்.

இங்கே விவசாயத்தையே தொழிலாகக்கொண்ட உழைக்கும் விவசாயிகளுக்கு, இங்கிருக்கும் மற்ற இடங் களையெல்லாம்விட, அதிகமான கூலி கிடைப்பதாகத் தெரிவித்தார்கள்.

8 மணி நேர வேலைக்கு, ஆள் ஒன்றுக்கு, நாள் ஒன்றுக்கு, 16 டாலர், 2 சென்ட், (ரூ. 4-12-0) அதே

சமயம், இங்கு உழைப்பவர்களுக்கு மற்ற எல்லா இடங் களையும்விட, உழைப்பும் கடினமானது.

இந்தத் தீவுகளிலே, அனுசிப்பழமும், கரும்பும்தான் அதிகமாகப் பயிரிடுகிறார்கள். ஒரு நாள், "சன்" (Chan) என்னும் ஒரு இடத்தைப் பார்க்கப் போனோம். இங்கே எங்களை, விவசாயிகளின் தலைவர் ஒருவர் வரவேற்றார். இந்தத் தீவில், இரண்டு விவசாய சங்கங்கள் இருப்ப தாகவும், விவசாயிகளின் நலன்களுக்குத் தொண்டாற்று வது அந்தச் சங்கங்களின் வேலை முறைகளென்றும், அந்தத் தலைவர் எங்களிடம் தெரிவித்தார். இங்கு, "வாட்டர் கிரைஸ்" (Water Grise) என்னும், ஒருவகைக் கீரையைப் பயிரிடுகின்றனர். ஹானலூலு ஹைலேண்ட் (Hanalulu Highland) என்ற இடம்தான் இந்தத் தீவு களின் தலைநகரமாகத் துலங்குகிறது.

இந்தத் தீவுகளில் விளைவிக்கப்படும் பொருள்களை யெல்லாம், வருடமுழுவதும் அங்குள்ள கூட்டுறவு ஸ்தாப னத்தின் மூலம்தான் விற்பனைசெய்து கொண்டிருக் கிறார்கள் என்பதைக் கேட்டு மகிழ்ந்தோம்.

இன்னொருநாள். ஹவாயிலிருந்து, ஹில்லோ (Hillo) என்ற இடம் போனோம். இது நமது பக்கத்திலுள்ள தாலூக்காத் தலைமையிடம்போல ஓரளவு நாகரிகம் பெற்ற ஸ்தலமாகக் காட்சியளிக்கிறது.

இங்கு, "ஹோர்க்ட்" (Harked) என்ற ஒரு மலர் 5 சென்டிற்கு விற்கப்படுகிறது. (24 பைசா)

1959-ஆம் ஆண்டு பொங்கி வெடித்திருந்த எரிமலை யைப் பார்த்தோம்.

எரிமலைக் குழம்பு, புண் புரையோடியதுபோல வழிந்து, கல்நெஞ்சம் படைத்தவர்களின் மனம்போல காய்ந்து இறுகியுள்ளது.

அன்று இரவு 7 மணிக்கு விவசாயிகளைக்கொண்ட ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்தக் கூட்டத்தில் இந்தியத் தூதுக் குழுவினருக்கு வரவேற்பளிக்கப்பட்டது. மிக உற்சாகமாக அங்கிருந்த விவசாயிகள் தூதுக்குழு விவசாயிகளை முகமலர வரவேற்றார்கள்.

இங்கு, கரும்பு வெள்ளாண்மையில் அதிகக் கவனம் செலுத்துகின்றனர். இந்தக் கரும்பு இங்கெல்லாம் மூன்றுவருட வெள்ளாண்மையாக இருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது. நம் நாட்டிலெல்லாம் ஒரு வருட வெள்ளாண்மைதான். கரும்புகளை மனிதர்கள் வெட்டு வதில்லை. இந்த வேலையையும் இயந்திரமே செய்து முடித்துவிடுகிறது.

இந்த வேலை முடிந்தவுடன் நான் கடலைப் பார்த்து வரப் போனேன். இந்தக் கடற்கரையின் நீளம் மிகவும் அதிகம். கடற்கரையோரமாகச் சென்றுகொண்டிருந்த போது, வழியில் வந்துகொண்டிருந்த குடும்பப் பொருளா தார ஏஜெண்ட் (Home Economic Agent) டைச் சந்தித் தேன். என்னை அவர் இந்தியப் பெண் என்று தெரிந்த வுடன் தன் வீட்டிற்கு வந்துவிட்டுச் செல்லவேண்டு மென்று அன்பு தவழ அழைத்தார.

பிறகு, அவர் வீட்டிற்குச் சென்றேன். எனக்குத் தேனீர் வழங்கி, தன்னுடைய காரிலேயே நாங்கள் தங்கி யிருந்த இருப்பிடத்தில் கொண்டுவந்து விட்டுவிட்டுப் போனார். இன்னொருநாள் ஒரு மாட்டுப் பண்ணையைப் பார்த்தோம். இந்தப் பண்ணைக்கு 3000 (மூவாயிரம் ஏக்கர்) மேய்ச்சல்காடு சொந்தமாக இருக்கிறது. இங்கே, அடிமாடுகள்தான் அதிகமாக வளர்க்கப்படுகின்றன.

இந்த இடத்திற்கு, "பார்க்கர் ரேஞ்ச்" (Parker Ranch) என்று பெயர். இந்த வட்டாரத்தில் 100 ரேஞ்ச்சுகள் இருக்கின்றன. இந்தப் பகுதியில் 2,65,000-ஏக்கர் பூமியுள்ளது. இதையெல்லாம் பார்த்தபின், இன்னொருநாள், "ஹொல்லா" (Holla Dance) என்ற நடனத்தைப் பார்த்தோம். பார்ப்பதற்கு நன்ருக இருந்தது. இந்த நிகழ்ச்சியை, பார்வையாளர்களாகச் சென்றிருந்த எங்கள் தூதுக் குழுவினருக்காக நடத்திக் காண்பித்தார்கள்.

இந்த நடனத்தில் பங்கு கொண்டவர்களெல்லாம் பொதுப் பள்ளியின் மாணவர்களாகும்.

பொது இடங்களிலெல்லாம்கூட இந்த நடன நிகழ்ச்சியை மாணவர்கள் நடத்துவார்களாம்.

பிறிதொருநாள், எங்களைச் சந்திப்பதற்காக 4—H. கிளப் அங்கத்தினர்கள் ஐந்தாறுபேர் நாங்கள் தங்கியிருந்த ஹோட்டலுக்கு வந்திருந்தார்கள்.

எங்களிடம் அவர்கள் தாங்கள் செய்யும் வேலை முறைகளைச் சொல்லி, நாங்கள் புரிந்து கொள்வதற்காகச் சில விஷயங்களை உணர்த்தி எங்கள் முன்னுல் பாட்டுப் பாடி, ஆட்டம் ஆடி இந்திய விருந்தினர்களாகிய எங்களுக்கு உணர்ச்சிமிக்க வரவேற்பளித்தார்கள். பிறகு, இங்கிருந்து, டோக்கியோ (Tokyo) விற்கு ஒருநாள் அதிகாலையில் போய்ச் சேர்ந்தோம்.

இங்குதான், நமது இந்தியத் தூதுவர் அலுவலகத்திலுள்ள அதிகாரிகளைச் சந்தித்தோம். அவர்களோடு நாங்கள் போட்டோவும் எடுத்துக்கொண்டோம். இங்கு, "ஆசிய கோயகா" (Asia Koyaka) என்ற இடத்திலிருக்கும் விவசாய மாளிகையில் எங்களுக்கு வகுப்புகள்

நடைபெற்றன. அங்கு எங்களுக்கு, "கோவயாஷி" (Kovayashi) கொடுத்து உபசரித்தார்கள். அதாவது, வெறும் தேனீர் கொடுத்தார்கள். இதற்குத்தான் அந்தப் பெயர்.

நாங்கள் அங்கு சென்றிருந்தபோது, அறுவடைக் காலம் முடிந்திருந்த சமயம். ஆதலால், நெல், பயிரிடும் முறைகளை, எங்களுக்கு, சினிமாவில் காண்பித்தார்கள்.

ஜப்பானின் மொத்த விவசாயிகளின் எண்ணிக்கை. 60 லட்சம். இங்கே ஒரு வருடத்தின் சராசரி நெல் உற்பத்தி, 51, பாயின்ட். 8 பர்சன்ட்; கோதுமையும், பார்லியும், 7. பாயின்ட், 6, பெர்சன்ட்; பீன்ஸ். o. பாயின்ட், 3. பெர்சன்ட்; உருளைக்கிழங்கு 4 பாயின்ட்'o' பெர்சன்ட்; வெஜிட்டபிள். 6. பாயின்ட், 8. பெர்சன்ட்; பழவகை. 4, பாயின்ட், 9, பெர்சன்ட்; பட்டு, 3. பெர்சன்ட்: கால் நடைகள், 12, பாயின்ட், 9. பெர்சன்ட்; வைக்கோல், 'o' பாயின்ட், 6. பெர்சன்ட்.

இந்தப் பொருள்களின் மொத்த விளைச்சலில், 50, சத விகிதப் பொருள்கள், உற்பத்தியாளர்களின் (விவசாயிகள்) சொந்தச் சில விற்கே சரியாகி விடுகின்றன. மீதமிருக்கும், 50 சதவிகிதப் பொருள்கள்தான் விற்பனைச் சந்தைக்கு வருகின்றன.

இரண்டாம் உலக மகாயுத்தத்தில், கொடுமைக்காரப் போர் வெறியர்களின் செயல்களால் பெரிதும் பாதிக்கப் பட்டிருத்த ஜப்பான், இன்றைக்கு இந்த அளவு, விவசாயத்துறையில், முன்னேறி இருப்பது ஆச்சரியப் படத்தக்கதாகும். யுத்தத்திற்குப் பிறகு, ஜப்பான் நாட்டு மக்கள், பழம், காய்கறி, மீன், கால்நடை ஆகிய வற்றின் வளர்ச்சியில் அதிகக் கவனம் வைத்துச் செய

லாற்றுகிருர்கள் என்பதை, நாம் பாராட்டி மகிழ வேண்டும்.

அங்குள்ள, விவசாய இலாக்கா, கால்நடைகளைப் பற்றியும், அவற்றைப் பாதுகாத்து வளர்ப்பது பற்றியும் பயிற்சியளித்து வருகிறது. இந்தப் பயிற்சியளிப்பில், விஷயங்களைப் பயின்று செல்கின்றவர்கள், வெளியிலுள்ள பயிற்சி பெற வாய்ப்பில்லாதவர்களுக்குச் சொல்லித் தருகிருர்கள். இந்தப் பயிற்சியளிப்பு முறை, அந்த நாட்டு விவசாய உலகத்திற்கு, ஆக்கத்தையும், ஊக்கத்தையும் தந்து உதவுகிறது.

ஜப்பான் நாட்டு மக்களின் சராசரி வருட வருமானம் (ஓய்வு நேர உப வேலைகளையும் சேர்த்து) 5,000, என்.

இங்கு, நாங்கள், பார்க்க வேண்டிய இடங்களை யெல்லாம் பார்த்து விட்டு, சிங்கப்பூர் வழியாக எங்கள் நான்கு மாதப் பெரும் பயணத்திட்டத்தை முடித்துக் கொண்டு, டிசம்பர் 24-ஆம், தேதி, இந்தியத் தலைநகர் டெல்லிக்கு வந்து சேர்ந்தேன். இந்தப் பயணம். பயனுள்ள பயணமாகவும், பல புதிய அநுபவங்களையும், அறிவையும், பெறுவதற்கான வாய்ப்புகளைத் தந்த பயண மாகவும் இருந்தது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

## கால்நடை

ஐக்கிய அமெரிக்காவின் நல்ல திட்டங்களில் பெரும் பங்கு வைப்பதும், முக்கியத்துவ முடையதும் கால் நடை வளர்ப்பாகும்.

விஞ்ஞானத்தின் மூலம் புதுப் புது வசதிகளைப் பெற்றிருக்கும் விவசாயத் துறையில், புதுப் புதுப்

பண்ணைகளை அமைப்பதற்காக, புதுமைகள் என்று போற்றப்படும் பல முறைகளை அவர்கள் கையாளு கிறார்கள்.

கால் நடை வளர்ப்பின் அங்கங்களாகத் திகழும் பால் பண்ணை, கோழிப் பண்ணை, மாட்டுப் பண்ணை; பன்றி, தாராவாத்து, ஆடு ஆகியவை வளர்க்கும் பண்ணை ஆகியவைகள், பிரதானமாக இருக்கின்றன. இவற்றிற் கெல்லாம் ஐக்கிய அமெரிக்க சர்க்கார் எல்லா உதவி களையும் செய்கிறார்கள்.

## வம்ச வளர்ப்பு

குறப்பாக அமெரிக்காவில், "பால் பண்ணை" விவசாய முன்னேற்றத்தில் சிறப்புமிக்க தனி இடத்தைப் பெற்று விளங்குகிறது. சிறப்பாக மத்திய மேற்கு அமெரிக்காவிலும் பெரும் பெரும் ஏரிகளுள்ள ஸ்தலங் களிலும் விவசாயம் பரவலாக முன்னேற்றம் அடைந் துள்ளது.

வியாபார நோக்கத்திற்கு என்று ஏற்படும் பால் விற்பனையை நல்ல விதமாக நடத்துகிறார்கள். இந்தப் பண்ணைகள் மூலம், அமெரிக்கா முழுவதற்கும் தேவைப் படும் தானியங்களும், பிற ஆகாரப் பொருள்களும் சுலப மாகவும், சௌகரியமாகவும் கிடைக்கின்றன.

1954-ஆம் வருடக் கணக்குப் படி, ஒவ்வொரு பால் பண்ணையிலும், சராசரி 45, பசுக்கள் வீதம் இருந்திருக் கின்றன. அதிகமான இடங்களிலும், பெரும்பாலான பண்ணைகளிலும் பால் விற்பனைக்கான முயற்சியில் அதிகக் கவனம் செலுத்தியிருக்கிறார்கள் என்று தெரிகிறது. அத்தகைய பண்ணைகளில், பால் விற்பனை, சிறப்பாகவும், இலாபகரமாகவும் நடந்திருக்கிறது. அங்கே ஒவ்வொரு

பண்ணேக்கும், 100 பசுக்கள் வீதம் இருக்கின்றன. தெற்கு காலி போர்னியாவிலிருக்கும் ஒவ்வொரு பண்ணே களிலும், 200-க்கும் மேற்பட்ட பசுக்கள் இருக்கின்றன.

அமெரிக்காவில், அக்கறையோடு கவனிக்கப்பட்டு வரும் 6,விதமான வம்சங்களின் வளர்ச்சியைஇப்பொழுது பிரதானமாகக் கவனித்து வருகிருர்கள். அவற்றில் (1) பிரவ்ன்ஸ்விஸ்,(Brownswiss) (2) கெரான்சி (Guernsey) (3) ஹோல்ஸ்ட்யன்ஸ், (Holsteins) (4) அரிஷார், (Aryshire) (5) ஜெர்சி, (Jersey) (6) ரெட்டானிஷ், (Reddanish) ஆகிய ஜாதி மாடுகள் முக்கியமானவை. இந்த ஜாதி மாடுகளின் மூலம் கிடைக்கும் வெண்ணே யையும், கொழுப்புச் சத்து மிக்க இதர பொருள்களேயும் அமெரிக்க மக்கள் பெரிதும் விரும்பி வாங்குகின்றனர். இந்த ஜாதிப் பசுக்களில்தான், மிகவும் அதிகமான பால் கிடைக்கிறது.

இந்த ஜாதிப் பசுக்களேயேதான், எல்லா ஐரோப்பிய நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்கின்றனர்.

பொலி 'காளேக்களுக்கென்று இங்கு வளர்க்கப் படுபவை, பிளாக் ஆங்கஸ் (Black Angus) ஹெர் போர்ட் (Herford) ஆகிய ஜாதிகளாகும். இவை தவிர ரெட்போல் (Redpoll) டெவோன் (Devon) என்கின்ற ஜாதி மாடுகள் பொலிக்கும், மற்ற உழைப்பிற்கும் பயன் படுத்தப்படுகின்றன.

இங்கிருக்கும் பால் பண்ணேகளில், 1957-ம் வருடத்தின் பால் உற்பத்தி, 8,100, பவுண்டுகள் முதல் 8,800 பவுண்டுகள் வரையிலும் கிடைத்துள்ளது.

இந்த அளவுக் கணக்கு, பசுக்கள் பால் தரும் காலத்தில் எடுத்த கணக்காகும்.

அமெரிக்காவில் வம்சங்களின் "தரம்" கெடாமல் இருப்பதற்காக, பொலி காளைகள் விஷயத்தில் அதிகக் கவனம் செலுத்திக்கொண்டு வருகிறார்கள்.

இவ்விதம் பாதுகாக்கப்படும் பொலி காளைகளுக்கு இந்த நாட்டில் கிராக்கி அதிகம். இத்தகைய பொலி காளைகளை வைத்திருக்கும் சொந்தக்காரர்களும், நல்ல வருமானத்தை அடைந்து வருகின்றனர்.

இங்கு இயற்கைப் பொலியின் மூலம், பணச் செலவு, அதிகமாகின்ற காரணத்தால், சில கூட்டுப் பண்ணைகள், செயற்கைக் கருத்தரிப்பு முறையைக் கையாண்டு வரு கின்றன. Artificial insemination.

செயற்கைக் கருத்தரிப்பின் மூலம் அடையும் நன்மைகள்தான் என்ன? முதலாவதாக, குறைந்த பணச் செலவு.

இயற்கைக் கருத்தரிப்புப் போலவே, செயற்கைக் கருத்தரிப்பிலும் தகுந்த பலன் கிடைக்கும் சிறப்பு; இயற்கைக் கருத்தரிப்பில்கூட, சில சமயங்களில் தோல்வி ஏற்பட்டுவிடுவதுண்டு. ஆனால், செயற்கைக் கருத்தரிப்பில் அப்படியெல்லாம் ஏற்படுவதில்லை.

இங்கே, செயற்கைக் கருத்தரிப்பிற்கென்றே தனிச் சங்கங்கள் வைத்து நடத்தி வருகின்றனர்.

இத்தகைய சங்கங்கள் 1956-ஆண்டு 2,174, இருந்தன என்ற கணக்கு, அங்கே கூறப்பட்டது. இது போன்ற சங்கங்களால், இங்கே மூன்றில் ஒரு பாகம் பசுக்கள், அதாவது, 60 லட்சம் பசுக்கள் பலன் பெற்றிருக்கின்றன.

# ஆகாரமும் நிர்வாக முறையும்

அமெரிக்காவின் புது முறையான வளர்ப்புப் பண்ணை களின் மூலம் நல்ல விதமான, பலவிதப் பலன்களைச் செல்வாதாரத் துறையிலும், நிர்வாகத் துறையிலும் மக்கள் அடைகின்றூர்கள். அவர்களது வளர்ப்பு முறையின் மூலம், முதலாவதாகப் பணச் செலவு குறைவுபடுகிறது. அதே சமயம், வளர்ப்புச் சிறப்பின் காரணமாக விசேஷ வசதியும், நிறைந்த லாபமும் கிடைக்கிறது.

இங்கெல்லாம் இயந்திர சாதங்னகளுக்கு முக்கியத் துவம் கொடுத்து, அவற்றைப் பயனுள்ள முறையில் பயன் படுத்தப்படுகின்றன—பயன்பட்டும் வருகின்றன.

இங்குள்ள ஒவ்வொரு பண்ணையிலும், பசுக்களைக் குறைவாக வைத்திருந்தாலும், அவற்றின் மூலமாகப் பலனை அதிகம் அடைகின்றனர்.

அது மட்டுமல்ல. பால் கறவையும் அதிக நாட்கள் கறக்கும்படியாகச் செய்கின்றனர்.

பால் பண்ணைக்கு என்று அவர்கள், என்னென்ன செலவுகளைச் செய்கிறூர்கள் என்பதை நாம் அறிந்து கொள்வது முக்கியம்.

பொலிக்கு விடுவதற்காகக் கட்டப்படும் கட்டணச் செலவு; கால் நடை வைத்திய வசதிக்காக ஆகும் செலவு; பண்ணையின் நிர்வாகச்செலவு; பண்ணைக்குத்தேவையான சம்பந்தப்பட்ட இயந்திரங்கள், வாங்குவதற்காக ஆகும் செலவு ; இவற்றையெல்லாம் வைத்து பாதுகாக்கும் கட்டிடச் செலவு; கால்நடைகளுக்குக் கொடுக்கப்படும் ஆகாரச் செலவு; இடையிடையே பசுக்களில் சில தகுதி யற்றதாகி விட்டால், அவற்றை நீக்கிவிட்டு, தகுதி யான பசுக்களைச் சேர்த்துக் கொள்ள அல்லது வாங்கிச்

கொள்ள ஆகும் செலவு ஆகியவைகள்தான். பண்ணை யாளர்கள், அநேகமாக அவர்களுக்குள்ள நிலங்களிலேயே புல்லையும், தானியங்களையும் விளைவித்துக் கொள் கின்றனர்.

இவர்களுக்குச் சொந்தத்தில் விளைவித்தது போத வில்லையானுல், சந்தைகளில், கால்நடைகளுக்கான தகுந்த ஆகாரங்கள், நியாயமான விலைக்குக் கிடைக்கின்றன. அங்கு போய் வாங்கிக் கொள்கின்றனர்.

இந்த ஆகாரப் பொருள்களின் ''தரம்'' அநேகமாக எல்லா இடங்களிலும் ஒரே மாதிரியாகவே இருக்கிறது.

கால்நடை ஆகாரப் பொருள்களின் விலையை, அளவுக் கணக்கை வைத்துத்தான் நிர்ணயித்திருக் கின்றனரே தவிர, தரத்தின் தன்மையைக் கொண்டு அல்ல; ஏனெனில், ''தரம்'' எல்லா இடங்களிலும் ஒரே மாதிரியாக இருப்பதால்தான்.

அமெரிக்க விவசாய மக்களுடைய இத்தகைய சிறந்த முயற்சிகளின் மூலமாகக் கிடைத்திருக்கும் பலன்கள் மகத்தானவை.

இதன் மூலம் அமெரிக்க அரசுக்கு, மிகப் பெரிய நன்மைகள் ஏற்பட்டிருக்கின்றன என்றே சொல்ல வேண்டும்.

பெரும்பாலும் சர்க்கார் செய்து தரவேண்டிய சௌகரியங்களை யெல்லாம், விவசாயிகளே சொந்த முயற்சியின் மூலம் ஒற்றுமையோடு செய்து கொள் கின்றுர்கள்.

கால் நடைகளைப் பொறுத்தமட்டில் அவற்றிற்குக் காலாகாலத்தில் ஆகார வசதிகளைச் செய்து தரவேண்டும். அப்பொழுதுதான், பண்ணைகள் வேகமாக வளர்ச்சி யடைய முடியும். நமது நாட்டைப் பொறுத்தவரையில்

நமது விவசாயிகளுக்கு, சர்க்கார் முடிந்த உதவிகளையும் வசதிகளையும் செய்து வருகிறது. ஆனால் இன்னும் போதுமான வசதிகளைச் செய்துதர வேண்டும். அல்லது விவசாயிகளே தேவையான வசதிகளைச் செய்து கொள்ளும் அளவுக்குச் சூழ்நிலைகளை உருவாக்கித் தர வேண்டும். போதுமான வசதிகள் மக்களுக்கு இல்லாமற் போய் விடுமானால், ''விவசாய முன்னேற்றம்'' என்ற பொருள் பொதிந்த ''ஒலி'' மே காற்றில் கலந்துவிடும்.

நமது, நாட்டிலே பால் பண்ணைகளை ஏற்படுத்து கின்றபோது, பயனற்ற பசுக்களின் எண்ணிக்கையைக் குறைத்தும், அவற்றின், பால் உற்பத்தியை அதிகப் படுத்தியும் வந்தால்தான், கால்நடைகளைக் கண்களைப் போல் காத்து வரும் விவசாய மக்களின் வாழ்வு, சீர டையும்; செழிப்பாகும்; நாட்டில் செல்வாதார நிலையும் உயர்வடைய முடியும்.

இல்லாவிட்டால், விவசாய மக்களுக்கு, ''நல்ல உழைப்பாளிகள்'' என்ற பட்டத்தைத் தவிர, மிச்ச மாவது எதுவுமில்லை என்ற நிலைமைதான் ஏற்படும்.

அமெரிக்காவிலே, பாலுக்குத் தகுதியற்றதாக இருக்கும் பசுக்களையெல்லாம் ஒழித்து விடுகிறார்கள். அதனால், அந்த விவசாய மக்கள், பொருளாதாரத் துறையில் முன்னேறுவதற்கு இந்த முறை, ஓரளவுக்குத் துணை புரிகிறது. நமது இந்தியாவிலே, பாலுக்குத் தகுதி யற்றதாக ஏராளமான பசுக்கள் உள்ளன.

அவை பற்றித் தெளிவான ஆராய்ச்சி நடத்தி, ஒன்று, பால் உற்பத்தியை அதிகரிக்க வேண்டும். இல்லா விட்டால், சர்க்கார், இது பற்றி நன்கு சிந்தித்து வீணாகும் நாட்டின் பொருளாதார விரயத்தைத் தடுக்க வேண்டும். பசுக்களைத் தெய்வமெனத் துதிக்கும் நமது நாட்டில்,

இது விஷயத்தில் குறிப்பாகவும், ஆழ்ந்தும் சிந்தித்து ஓர் சிறந்த முடிவை எடுக்க வேண்டும்.

அப்போதுதான், விவசாயத் துறையில் நாம் கணிசமான அளவுக்கு முன்னேற்றத்தைக் காண முடியும். அமெரிக்காவிலுள்ள ஒவ்வொரு பண்ணைகளிலும் புல் வளர்க்கப்படுகிறது. இது தவிர, சோளத்திலிருந்தும் மில்லட் (Millet) சோயாபீன்ஸ் (Soyabeans) சோர்காம் (Sorghams) என்பன போன்ற தானியங்களிலிருந்தும் உடனடியாக உபயோகித்துக் கொள்வதற்கான ஆகாரப் பொருள்கள் சேமிக்கப்படுகின்றது.

பால் பண்ணைகளில் கிடைக்கும் தரமான கால்நடைகளின் அபிவிருத்தியையும், பசுக்களின் பால் உற்பத்தியையும் சரியாகக் கணக்கு வைத்துக்கொண்டு வருகிறார்கள்.

## சந்தை தேடு முறையும் போக்குவரத்தும்

முன்பு, அரசாங்கத்தால் கால்நடைப் பண்ணைகளுக்கு எவ்விதத்தில் ஆதரவு கிடைத்தது என்பதைப் பார்த்தோம். இனி, அரசாங்க முயற்சியாலும், கூட்டுறவுப் பண்ணைகளை நடத்துபவர்களாலும், பால் பண்ணைகளின் பொருள்கள், எவ்வளவு சீக்கிரமாக வெளியில் எடுத்துச் செல்வதற்கு முடிகிறது என்பதைக் கவனிக்க வேண்டும். கூட்டுறவு விவசாயப் பண்ணைக்காரர்கள், போக்குவரத்து சாதனங்களை, அதிசயிக்கத் தக்க வண்ணம் கையாளுகிறார்கள். ஆதலால் உடனுக்குடன், பால் விநியோகிக்கப்பட்டுவிடுகிறது. மிஸ்ஸவ்ரி ஸ்பிரிங் (Missourispring) என்னும் இடத்தில் சில பால் பண்ணைகள் உள்ள இடங்களையும், அங்கு கையாளப்படும் முறைகளையும், நான் காண நேர்ந்தது. பால் பண்ணை

களில் கிடைக்கும் பாலுக்கும், பால் சம்பந்தப்பட்ட இதர பொருள்களுக்கும் அரசாங்கமே சரியான விலையை, நிர்ணயித்து வைத்திருக்கிறது.

ஒவ்வொரு பண்ணைக்கும் போதுமான இட வசதி இருக்கிறது. பண்ணை ஒன்றுக்கு 25 பசுக்கள் ஒதுக்கி வைத்திருக்கின்றனர். இப்பண்ணைகளின் வேலைகளுக்கென்று இயந்திர வசதிகளும் செய்து தரப்பட்டிருக்கின்றன.

இவைகள் எல்லாவற்றையும் இரண்டு மனிதர்கள் நிர்வகித்துக் கொள்ள முடியும் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

100 முதல் 150 பசுக்கள் உள்ள ஒரு பண்ணையை நவீன இயந்திர சாதனங்களைக்கொண்டு, நான்கே நான்கு மனிதர்கள் நிர்வகித்துவிடலாம்.

இங்கெல்லாம் 4 காலன் பாலை ஒரே சமயத்தில் கறப்பதற்கான மிஷின்கள் இருக்கின்றன.

மிஷின்களின் மூலம், பாலைக் கறப்பது, பாலைக் குளிர வைப்பது, பதப்படுத்துவது போன்ற வேலைகளை எளிதாகச் செய்துவிடுகிறார்கள். இதற்கான மின்சார வசதிகளை, விவசாய மின்சாரக் கூட்டுறவுச் சங்கத்தின் மூலமே பெற்றுக்கொள்கின்றனர்.

அமெரிக்கா முழுவதும், பரவலாக, இது போன்ற சங்கங்கள் உள்ளன. சர்க்காருக்காக, சர்க்காரால் நியமிக்கப்பட்டிருக்கும் கவுண்டி ஏஜெண்ட், (County Agent) கூட்டுறவுப் பால் பண்ணைகளுக்கு மட்டுமல்லாமல், தனியார் விவசாயப் பண்ணைகளுக்கும், தேவையான எல்லா வசதிகளையும் செய்து தருகிறார். இங்குள்ள நில விநியோகக் கல்லூரிகளால் ஏற்படுத்தப்படும் பண்ணைகளில்,

எத்தகைய நிர்வாக—அரசியல் தலையீடுமில்லாமல் சுதந்திரமாக இயங்கிவர முடிகிறது.

இத்தகைய சிறப்புமிக்க திட்டங்களும், வேலை முறைகளும் எங்கள் எல்லோரையுமே ஆச்சரியப்பட வைத்தன. இங்குள்ள விவசாயிகள், தங்களுடைய பண்ணைகளைத் தாங்களே நிர்வகித்துக் கொள்வதால், அவர்கள் எந்த ஒரு காரியத்தையும், பிறருடைய உதவி இல்லாமல் சுயமாக அவர்களே சிந்தித்து, முடிவு செய்து, சிறப்பாக நடத்திக் கொள்ளும்—வளர்த்துச் செல்லும் சக்தியைப் பெறுகிறார்கள்—பெற்றும் இருக்கிறார்கள்.

புதிய ஜனநாயக உணர்ச்சி மிக்கவர்களான அமெரிக்க மக்களுக்கு அந்த நாட்டு அரசாங்கம், செய்து வரும் வசதிகளும், வளப்படுத்தும் கல்வி முறைகளும், அந்த மக்கள் மனதிலே, புதிய நம்பிக்கைகளையும், உழைப்பிலே சோர்வில்லாத் தன்மைகளையும் உண்டாக்கி வைக்கின்றன.

இன்னொரு, முக்கியமான—நாம் தெரிந்து கொள்ள வேண்டிய அம்சம், மக்கள், தங்களைத் தாங்களே முன்னேற்றிக்கொள்ளும் முறைகளையும், சக்தியினையும் அவர்கள் அறிந்திருப்பதுதான். சிறப்பாகக் கால்நடை வளர்ச்சி கால்நடை மருத்துவம், காடு வளர்ப்பு, பண்ணை அமைப்பு கூட்டுறவு ஆகிய இவையெல்லாம் அமெரிக்காவில், ''விவசாயம்'' என்ற தாய்மை இயக்கத்தின், பல முக்கியமான பிரிவுகளாகி இயங்குகின்றன.

இம்மாதிரியான உயர்ந்த முறைகளால், பால் பண்ணைகள் செழிக்கவும், நாட்டின் சுகாதாரம் பாதுகாக்கப்படவும், செல்வாதார வளர்ச்சி தழைக்கவும்; போக்குவரத்து வசதிகள் தடையின்றி லகுவாக நடைபெறவும் வழி பிறக்கின்றன.

இங்கு சர்க்காரால் நடத்தப்படும் கடன் தரும் சங்கங்கள் மூலம் விவசாயிகள் தங்களுடைய பண்ணைகளுக்குத் தேவையான கருவிகளையும், இன்ன பிற பொருள்களையும் கடன்களில் வாங்குவதற்காக வசதிகள் செய்து தரப்பட்டுள்ளன.

விவசாயிகளுக்கு, இந்த உதவிகள் மட்டுமல்ல, பல தனிப்பட்ட சங்கங்கள் மூலமும், விவசாயச் சந்தைகள் மூலமும், இன்னும் சில பொது ஸ்தாபனங்கள் மூலமும் பல விதமான கண்காட்சிகள் நடத்தி, விவசாயத்துறையில் விவசாயிகளின் சாதனைகளுக்கும், திறமைக்கும், பற்பல சிறப்புப் பரிசில்களும், பாராட்டுப் பத்திரங்களும், நம் நாட்டில் போலவே அங்கும் வழங்கி கௌரவிக்கப்படுகின்றன.

இந்த நடவடிக்கைகள் வாயிலாக விவசாயிகளின் ஆர்வமும், ஊக்கமும் அதிகமாகிறது என்பது விவசாய உலகிற்கு மகிழ்ச்சியளிப்பதாகும்.

## பால்

அமெரிக்கா முழுவதும், பாலும், பாலைச் சேர்ந்த பொருள்களும், சிறிதளவுகூடத் தரம் குறைந்துவிடாதபடி, விநியோகிக்கப்படும் முறையானது, அந் நாட்டின் நிர்வாகத் திறமைக்குச் சிறப்பளிக்குமோர் அம்சமாகும்.

மாட்டுத் தொழுவங்களுக்கும், (கொட்டில்கள்) பால் கறக்கப்படும் இடங்களுக்கும், நுணுக்கமான சுகாதார வசதிகளைச் செய்திருக்கிறார்கள். அதனால் அந்த இடங்களுக்கும், கால்நடைகளுக்கும், தகுந்த பாதுகாப்புத் தரப்படுகின்றது.

எந்த ஜாதி, அல்லது எந்தப் பகுதிப் பசுக்களின் பாலில் கொழுப்புச் சத்து, (Fat) அளவு அதிகமாக உள்ளதோ, அதற்குத் தகுந்தவாறு பாலின் விலையை

நிர்ணயிக்கிறார்கள். நாட்டின் பல பாகங்களிலும், பல தரப்பட்ட (அதிகச் சத்து, குறைந்த சத்து) பால் கிடைப்பதற்கான வசதியும் பொது மக்களுக்குச் செய்து தரப்பட்டிருக்கின்றன.

பாலின் தரத்திற்கேற்ற விலையை நிர்ணயிப்பதில், அதிகக் கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறார்கள். உயர்தரமுள்ள பாலை உற்பத்தி செய்யும் பால் பண்ணைக் காரர்களுக்கு சர்க்கார் உற்சாகம் தந்து ஆதரித்து வருகிறது.

இதன் மூலம், நாடெங்கும் சுகாதாரத்தின் பயன் பரந்த அளவுக்குப் பலன் தருகிறது.

பால் பண்ணைகளை வளரச் செய்வதற்காகப் போக்கு வரத்து வசதிகளைத் துரிதப்படுத்தியும், பாலைக் குளிர வைக்கும் முறையைக் கையாண்டும், விற்பனைக்கான சந்தை தேடும் வழியை உண்டாக்கியும் விவசாயத் துறையை வளப்படுத்துகிறார்கள்; முன்னேறுகிறார்கள்.

இவற்றையெல்லாம் கூட்டுறவுச் சங்கங்கள் மூலம், தக்கபடி நிர்ணயிக்கப்பட்டு, பால் பண்ணைத் தொழிலுக்கே உயர்வு தேடித் தரச் செய்கிறார்கள்.

## மாட்டு மந்தை வளர்ப்பு

அமெரிக்காவிலே, மாட்டு மந்தை வளர்ப்புச் சங்கம் என்ற பெயரில் பல இடங்களில் இருக்கிறது. இந்தச் சங்கம், முதலில் மிச்சிக்கன் என்ற இடத்தில் ஆரம்பிக்கப் பட்டது.

பிற்காலத்தில், இதுவே, பால் பண்ணைகளின் வளர்ச்சிக்குப் பெரிய உதவியாக இருந்திருக்கிறது. இப்படிச் சங்கங்களை வளர்ப்பதற்கு, விவசாயிகள் மத்தியிலே

போட்டி மனப்பான்மையையும் இந்த அமைப்பின் தன்மை உருவாக்கியுள்ளது.

இப்பொழுது, அமெரிக்காவில் மாட்டுமந்தை வளர்ப்புச் சங்கங்களில் அங்கம் வகிக்காத பண்ணைகளே கிடையாது. இந்தச் சங்கங்கள் கடைப்பிடிக்கும் முறைகளினால், கடந்த 15 வருடங்களில், 20 லட்சம் கால்நடைகளைப் பராமரிக்கத்தக்க நிலை பிறந்திருக்கிறது.

இந்தச் சங்கங்களின் குறிக்கோளை நிறைவேற்றுவதற்கும், கொள்கையைப் பரப்புவதற்கும், பலப்படுத்துவதற்கும் அமெரிக்க சர்க்காரின் விவசாய இலாக்கா அக்கறை காட்டி வருகிறது.

ஐக்கிய அமெரிக்கக் குடியரசு மக்களில், 100 க்குப் 10, சத விகிதத்தினர் இந்தச் சங்கங்களால் பலன் பெற்றிருக்கின்றனர் என்றால், இந்த சக்தி மிக்க மாட்டு மந்தை வளர்ப்புச் சங்கத்தின் சிறப்புகளை அதிகம் விளக்க வேண்டுமா என்ன?

## 4-H. கிளப்

ஐக்கிய அமெரிக்காவில், முக்கியமாகக் குறிப்பிடப் படவேண்டியவற்றில் 4-H கிளப்பின் இயக்கமும்ஒன்று.

இந்த இயக்கம், நாடு முழுவதும் பல கிளைகளைக் கொண்டதாக உள்ளது. இந்த ஸ்தாபனத்தை, நமது நாட்டிலுள்ள சமுதாய நல அபிவிருத்தித் திட்ட (Block Development) ஸ்தாபனத்திற்கு ஒப்பிடலாம். இந்த 4-H கிளப், 1914-ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. இதில் சராசரி 15 வயது முதல், 26 வயது வரையிலுள்ளவர்கள் அங்கத்தினர்களாகலாம். குறைந்த பட்சமாக 5 முதல், 10 வரையிலும் உள்ள குழந்தைகளும் அங்கத்தினர்களாகலாம். 4-H. கிளப் வேலைகளுக்கு அந்த நாட்டு மக்களும்

குறிப்பாக விவசாய மக்களும், தங்களது இணையற்ற ஒத்துழைப்பைத் தந்து, பொது வேலைகளைச் செய்யும் தொண்டர்களை ஊக்குவிக்கிறார்கள். நமது நாட்டில், குறைகளை விமர்சிப்பதில்தான் அதிக அக்கறை காட்டப் படுகிறதே தவிர, கொள்கைகளை அமுலாக்கி, வெற்றி காணும் ஆர்வம் குறைந்து வருகிறது. குறைகளை எடுத்துச் சொல்லும் முறைகளையும், நல்லவற்றை வரவேற்கும் குணங்களையும் வெட்கப்படாமல், அமெரிக்க மக்களிடத் திலோ, பிறநாட்டு மக்களிடத்திலோ நாம் கற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

இந்த ஸ்தாபனத்தின்பால், சமூகத் தலைவர்களும், அரசியல் தலைவர்களும் அதிகமாக மரியாதை வைத்திருக் கின்றனர். இதை, நான் சென்ற இடங்களிலெல்லாம் காண முடிந்தது. இதில், அங்கம் வகிக்கும் அங்கத்தினர்கள் மக்களுக்குத் தேவைப்படும் பொதுவான உதவிகளையெல் லாம் செய்கின்றனர். இதிலுள்ள அங்கத்தினர்கள் தங்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள பகுதிகளில் போய் வேலை செய்கிறார்கள்.

இவர்களுக்கு, சர்க்காரின் சார்பாக கவுண்டி ஏஜெண்ட் (County Agent) ஒவ்வொரு பகுதியிலும் இருக்கிறார். அவர், தன்னுடைய கவுண்டிக்கு உட்பட்ட இடங்களில் வேலை செய்கிறார். கவுண்டி என்பது நாம் தாலூக்கா என்று சொல்வது போல, அவர்கள் ஒரு வட்டத்தைக் கவுண்டி என்று சொல்கிறார்கள். இந்த அதிகாரி, கிளப்பின் அங்கத்தினர்களுக்கு அதிகார பூர்வ மான எல்லா உதவிகளையும் செய்கிறார். ஆலோசனைகளும் கூறுகிறார்.

இத்தகைய பொதுநலத் தொண்டு செய்வதற்குக் கட்டாயப்படுத்தப் படுவதில்லை. தாங்களாகவே அங்கத் தினர்கள், முன்வர வேண்டும்.

இந்த ஸ்தாபனத்தில் அங்கத்தினர்களாக இருந்தவர்கள், கவர்னர்களாகவும், அமைச்சர்களாகவும் இருந்திருக்கிறார்கள் என்று கேட்டுப் பரவசமடைந்தோம்.

அங்கு, கூட்டுறவுச் செயல்முறை (Joint Activity) மூலம் எல்லா வேலைகளையும் பிறர் ஒத்துழைப்பின் மூலமே நிறைவேற்றுகின்றனர்.

இத்தகைய கூட்டுச் செயல் முறை நல்ல பலன்களைத் தந்துள்ளது. இந்த முறை, பல இளம் உள்ளம் படைத்தவர்களை ஸ்தாபனத்திற்கு அழைத்து வர உதவுகிறது. இந்த 4-H.நேஷனல் கிளப் ஊழியர்கள், ஆண்டுக்குஒருமுறைவாஷிங்டனில் சந்தித்துக்கொள்கின்றனர்.

அங்கே சந்திக்கின்ற சமயங்களில், தங்கள் பெடரல் சர்க்காரைப் பற்றியும், விவசாயத்தைப் பற்றியும், தங்கள் ஸ்தலங்களில் தாங்கள் செய்த பொது வேலைகளைப் பற்றியும் தங்களுக்குள்ள அனுபவத்தைப் பரிமாறிக் கொள்கின்றனர்.

சிறப்புமிக்க இந்த ஸ்தாபனத்தின் ஊழியர்களுக்கு வேண்டிய குணும்சங்கள்:

சகிப்புத் தன்மை; பொறுப்புணர்ச்சி; முன்முயற்சி உற்பத்தி செய்தல்; திட்டமிடுதல்; பிரச்சினைகளை அணுகு முறை தெரிதல்.

Tolerance; Industry ; Responsibility ; Initiative; and Creative in planning; and facing problems.

இந்த ஸ்தாபனத் தொண்டர்கள் உறுதி மொழி எடுத்துக் கொள்வது என்ன தெரியுமா?

(1) எனது மூளை, கட்டுப்பாடற்ற சிந்தனை செய்வதற்காக!

(2) எனது இதயம், பரிசுத்தமிக்க நாட்டுப் பற்றுக்காக!

(3) எனது கரங்கள், சமூக உழைப்பிற்காக!

(4) எனது நலம், எனது நல்வாழ்விற்காக!

ஆங்கிலத்தில் இவற்றைக் கீழ்க்கண்ட வாறு உச்சரிக்கின்றனர்:

My Head to Clearer Thinking
My Heart to Greater Loyalty
My Hands to Larger Service and
My Health to Better Living.

இந்த இலட்சிய வாக்கியங்களிலுள்ள நான்கு "H" யும் வைத்துத்தான், 4-H கிளப் என்ற பெயர் சூட்டியிருக்கிறார்கள். இந்தக் கிளப்பில், நாடு முழுவதிலும் 20,00,000 (இருபது லட்சம்) அங்கத்தினர்கள் இருக்கிறார்கள்.

இதில் அங்கம் வகிக்கும் இளம் உள்ளங்களுக்குப் போதிக்கப்பட்டுள்ள இன்னொரு முக்கியமான தன்மையைப் பாருங்கள்.

நன்றாக விளையாடவேண்டும்; பணம் சேர்க்க வேண்டும்; சொத்துக்காரனாக ஆகவேண்டும்; பல இடங்களுக்குச் செல்லவேண்டும்; பலதரப்பட்ட மக்களைச் சந்திக்கவேண்டும்; பல பொருள்களைப் பார்க்க வேண்டும்; பிரதானமானவனாக ஆகவேண்டும். இந்த ஸ்தாபனத்தில் சேர்ந்துள்ள குழந்தைகள், எந்நேரமும் எதையாவது செய்துகொண்டே இருக்கிறார்கள். சுறுசுறுப்பு அவ்வளவு அதிகம்! நம் நாட்டுக் குழந்தைகளுக்கும் அந்த நாட்டுக் குழந்தைகளுக்கும் மாறுபாடுகள் அதிகம் உள்ளன. உதாரணமாக, நமது குழந்தைகள் கையில் ஒரு நாலணாவைத் தந்தால் அந்தக் காசு தீரும் வரையிலே வீட்டு நினைப்பே இல்லாமல் கடைப்பக்கமே சுற்றிக்கொண்டிருப்பார்கள். காசு தீர்ந்தால்தான் வீட்டிற்குத் திரும்புவார்கள். பெரும்பாலான நமது குழந்தைகளின் நிலைமை இதுதான். இந்தத் தன்மையை நான்

குறிப்பிடும்பொழுது, நம் நாட்டுக் குழந்தைகளை நான் தாழ்வாக மதிப்பிடுகிறேன் என்று தயவு செய்து யாரும் நினைத்துவிட வேண்டாம். பொது உண்மைகளை யாரும் ஒளிவு மறைவின்றி வெளியிட்டால்தான், குறைகளை நிவர்த்தித்துக்கொள்ளும் புதிய சிந்தனைகள் உருவாகும். நமது சமுதாய அமைப்பும், கல்வியறிவும், வளர்ந்து வரும் இந்த நேரத்தில், குழந்தைகள்பால் பெற்றோர்கள் கொள்ளவேண்டிய கவலைகளை நினைவுறுத்தவே இதை இங்கே குறிப்பிட்டேன்.

நமது பாரதப் பிரதமர் கூறியதுபோல, ''நமது குழந்தைகளின் சுபிட்சமே எதிர்கால இன்பம்'' என்பதைத் தெரிவித்து இத்துடன் முடித்துக் கொள்கிறேன்.



## விநோதங்கள்

அமெரிக்காவில் சூப்பர் மார்க்கெட் (Super Market) என்று ஒன்று இருக்கிறது. அங்கே, வீட்டிற்குத் தேவையான எல்லாவிதமான பொருள்களும் கிடைக்கின்றன. அளவுக்கு—எடைக்குத் தகுந்த விலை நிர்ணயித்து பொட்டலங்களாக விற்கின்றன.

அவற்றைத் தேவைக்கேற்றவாறு நாம் வாங்கிவந்து, அப்படியே உபயோகப்படுத்தலாம். எல்லாவற்றையும் சுத்தப்படுத்தியே வைத்திருக்கிறார்கள். நாம் சுத்தப் படுத்தவேண்டும் என்ற அவசியமே இல்லை.

*அங்குள்ள மக்கள், எல்லா இடங்களிலும், எல்லோருடனும், பழகுமுறையிலானாலும் சரி, தொடர்பு கொள்ளும் எந்த நடவடிக்கைகளிலானாலும் சரி, ஒரே மாதிரியாக நடந்துகொள்கிறார்கள்.

*வாஷிங்கடனில் சராசரி ஒரு நிமிடத்திற்கு ஒரு விமானம் புறப்படும். ஒரு விமானம்வரும்.

*விபத்துகளினல், ஒரு நிமிடத்திற்கு ஒருவர் வீதம் சாகிறுர்.

*24 நிமிடத்திற்கு ஒருவர் வீதம் வெளிநாட்டி லிருந்து அமெரிக்காவிற்கு வருகிறுர்.

*24 மணி நேரத்திற்குள், ஐக்கிய அமெரிக்காவில் ஒரு மில்லியன் (10 லட்சம்) விமானங்களைப் பறக்கவிட முடியும்.

*லாஸ் ஏஞ்சல்சிலிருந்து நியூயார்க் வரையில் மொத்தம் 3000 (மூவாயிரம்)மைல்கள். இந்த மூவாயிரம் மைல்களுக்கும், இடையிலே எந்தக் குறுக்கு ரோடுகளும் கிடையாது.

*எல்லா ஹோட்டல்களிலும், 24 மணி நேரமும் தண்ணீரும், வெந்நீரும் கிடைக்கும்.

ஹவாயில், ''ரொட்டேட்டிங் ஹோட்டல்'' ஒன்று உள்ளது. இதில் உட்கார்ந்துகொண்டு சாப்பிட்டால், நாம் ஊர் முழுவதையும் சாப்பிட்டுக்கொண்டே பார்த்து விடலாம். ஹோட்டல் சுற்றிக்கொண்டே இருக்கும்.

## ''பில்லிங்ஸ் கெஜட்'' பேட்டி

இங்கு வந்துள்ள திருமதி. பார்வதி அர்ச்சுனன் அவர்கள், கால்நடை வளர்ப்பில் இந்தியாவிற்கும், மோண்டான (U. S. A.) விற்கும் அதிகம் வித்தியாச மில்லை என்றுர்.

திருமதி. அர்ச்சுனன் அவர்கள், 20 பேர் கொண்ட இந்திய விவசாயக் குழுவில் ஒருவராவார். இவர் ஐக்கிய அமெரிக்காவிற்கு விவசாயம் சம்பந்தமாகவும், கால் நடை வளர்ப்பு சம்பந்தமாகவும், புள்ளி விபரங்கள் சேகரிக்க அனுப்பப்பட்டவர்களில் ஒருவர்.

பில்லிங்ஸ் நகருக்கு, வியாழன் பிற்பகல் விமான மூலம் வந்திறங்கினர். அவர் லாரல் (Laurel) என்னு

மிடத்தில் விவசாயிகளால் நடத்தப்படும் எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலையைப் பார்வையிடுவார்.

வெள்ளிக்கிழமை, அவரது சகோதரரைப் பார்ப்பதற்காக மிஸ்ஸோலாவிற்குப் புறப்படுகிறார்.

இவரது சகோதரர், மோண்டானா கல்லூரியில் ஒரு மாணவராக உள்ளார். திரு. ஹென்றிவெண்டல், (Mr. Henry Vandel) திரு. ஆல் பிரியாண்ட் (Mr. Al Bryant) ஆகியோரால் விமான நிலையத்தில் வரவேற்கப்பட்டார்.

பிசிபிக் மகாசமுத்திரப் பகுதியில், கால்நடைகளுக்கு ஆகாரம் புண்ணாக்குதான் என்பதை விரைவில் புரிந்து கொண்டார்.

திருமதி. அர்ச்சுனன் அவர்களின் ஐயாயிரம் ஏக்கர் கொண்ட கால்நடைப் பண்ணையில், கால்நடைகளுக்கு கடலைப் புண்ணாக்கு உபயோகிப்பதாகவும் தெரிவித்தார். உரையாடலின்போது, தனது எஸ்ட்டேட்டில் நெல், கரும்பு, பருத்தி ஆகியவை பயிரிடப்படுவதாகக் குறிப்பிட்ட அவர், உடனே, ''ஆனாலும், எனக்குக் கால்நடை வளர்ப்பில்தான் அதிக ஆர்வம்'' எனச் சொன்னார்.

காங்கயம் கால்நடைப் பண்ணை, தென்பகுதித் தமிழ் மாநிலத்தில், ஈரோடு அருகே இருப்பதாகவும் உரைத்தார்.

அமெரிக்காவிலுள்ள 'பிரம்மா' என்ற இனம், காங்கயம் கால்நடைபோல இருப்பதாகத் தெரிவித்தார்.

தங்கள் பண்ணையிலிருந்து பொலிகாளைகளை, இந்திய சர்க்காருக்கு விநியோகம் செய்வதாகவும் சொன்னார்.

திருமதி. பார்வதி அர்ச்சுனன் அவர்களை, பில்லிங்ஸ் மேயர் திரு. கார்ல் க்ளாவெடெட்ச்சர் (Mayor Carl Clavadetscher) விமான நிலையத்திற்கு வந்து வரவேற்றார்.

திருமதி. அர்ச்சுனன் அவர்கள் தனது குழுவினரை விட்டுப் பிரிந்து, தனது சகோதரரைப் பார்ப்பதற்கு

மோண்டானு போகும் வழியில் இங்கு வந்ததாகவும், வரும் திங்களன்று, சான்பிரான்சிஸ்கோவில் தனது குழுவினரோடு சேர்ந்துகொள்ளப் போவதாகவும் சொன்னார்.

அவருடைய சுற்றுப்பயணம், வாஷிங்டன், நியூயார்க், சிக்காக்கோ, டென்வர் ஆகிய பகுதிகளில் இருக்கும்.

தாங்கள் டென்வர் சென்றபோது, மழையின் காரணமாக, ''மேற்குராஞ்ச்'' பகுதியைப் பார்க்க முடியாமல் போய்விட்டது என்று வருத்தம் தெரிவித்த அவர், மழை, பஸ்ஸிலிருந்து இறங்கக்கூட முடியாமல் செய்து விட்டது என்று தன் ஏமாற்றத்தை வெளியிட்டார்.

இனிமேலாகிலும், மிஸ்ஸோலா ''ராஞ்ச்'' பகுதியைப் பார்க்க முடியுமோ முடியாதோ என்ருர்.

தனது சகோதரர் என்ன திட்டமிட்டிருக்கிருரோ தெரியவில்லை என்ருர்.

அவர் தன் தாய்நாட்டின் வழக்கப்படி உடை அணிந் திருந்தார்.

தங்கள் பகுதியில் சோளம் அதிகமாகப் பயிரிடப்படுவ தாகவும், செஞ்சோளமும் அதன் தட்டைகளும் உபயோ கிப்பதாகவும், அமெரிக்காவில் நெல், பருத்தி பயிரிடப் படும் இடத்தை இன்னும் பார்க்கவில்லையென்றும், ஹவாய் பகுதியில் கரும்பு வெள்ளாண்மையைப் பார்க்கப் போவதாகவும் அறிவித்தார்.

திருமதி. அர்ச்சுனன் அவர்கள் குறிப்பிடும்பொழுது, கெண்டக்கிப் பகுதியிலுள்ள குதிரைப் பண்ணையைப் பார்க்கப்போவது சிறப்பான அம்சமாகுமென்ருர். இந்தக் குழு, ஐக்கிய அமெரிக்காவிற்கு ஆகஸ்ட் பிற்பகுதியில் வந்தது. இனி டிசம்பர் பிற்பகுதியில் தாயகம் திரும்பும். இந்தத் தூதுக்குழுவினரில் 18 ஆண்களும் 2 பெண்களும் உள்ளனர். —''பில்லிங்ஸ் கெஜட்'' **21—10—60**

